

உ

சேந்தன்திவாகரம்.

முதலாவது,

# தெய்வப்பெயர்த்தொகுதி.



மூலபாடம்-காப்பு.

தந்திமுகத்தெந்தை சதங்கைப்பதம்போற்றிச் ... *
சிந்தைவிளக்காந்திவாகரத்துள் - வந்த ..........*
ாகுதியொருபன்னிரண்டுஞ் சோராமனேரே...*
குதியுறமநமே பற்று... ............ ............*



சிவன்பெயர் — சங்கர னிறையோன் காமதக நன், கங்காதரனே கறைமிடற்றண்ணல், கூற்றையு தைத்தோன் குன்றவில்லி, ஏற்றுவாகனன் திரியம் பகன்சோதி, நக்கன்சடையோ னரிபகவன், முக்கட் பகவன் பசுபதிபரமன், கொன்றைசூடி கொலைமழு வாளி, ஈமத்தாடி பிஞ்சகன்பித்தன், ஆனையுரித்தோ லரன்சிவ னுருத்திரன், காலகாலன் கபாலமூர்த்தி, நீலகண்ட னீறணிகடவுள், அரவாபரண னரழலாடி, பிறையதுசூடி பெருமானுமாபதி, அழலதுவேந்தி பமலனாநந்தன், பரசுபாணிசுடலையாடி, மானிடமே ந்தி மறைமுதல்யோகி, புலித்தோலுடையோன் முனிறெரித்தோன், பிநாகபாணி பேயோட ாதன் புணரிகங்காளன், ஞானமூர்த்தி ஐம்முகன்பகவ னுதியாண்டரங்கன், அந்தி

லமர்கடவுள், தந்திரம்ப னாதன்றற்பரன்,கன்னனு-
மூர்த்தி கைலையாளியென், றெண்ணியநாமமின்னவு
ம்பலவே. ஆ-௬௪

திருமால்பெயர் — மாயோன்மாதவ னாரணன்
கேசவன், சிதரன்றிருமகன் பூமிகொழுநன், விண்டுவி
றலரி திரிவிக்கிரமன், உந்திபூத்தோ னுவணமுயர்த்
தோன், வாமநன்கண்ணன் கோவிந்தனச்சுதன், ஆழ்
கடற்றுயின்றோ னரவணைச் செல்வன், சக்கராயுத
னே கங்கமேந்தி, கருங்கடல்வண்ணன் கமலக்கண்
ணன்,சாரங்கபாணி தருபஞ்சாயுதன்,உலகமுண்டோ
னுலகினையளந்தோன்,நாரசிங்க னாதிவராகன், பது
நாமன் மதுசூதனனெடு, தாமோதரனே தருபீதாம்-
பரன்,காவற்கடவுண் முராரிமுகுந்தன்,பெருமான்பி
ரமன் றந்தையென்றிவைமுதற், றிருமாற்கநந்தஞ் சி
றந்தசொல்பெயரே. ஆ-௫௮

பிரமன்பெயர் — உந்தியினுதித்தோ னொளிமலர்
மிசையோன்,அன்னவூர்தி யன்னமுயர்த்தோன்,நான்
முகன்மான்மக னலங்கேழெண்கணன், வானவர்முத
ல்வன் மன்பொதுத்தந்தை, இறைவன்குரவன்மறை
யோன்விரிஞ்சன்,அந்தணன்ஞான னயன்வரன்றிசை
முகன்,பிதாமகன்விதாதா கமலயோநி,வேதாப்போத
ன்விதிபரமேட்டி, இரணியகருப்பன் படைப்போனி
வைமுதல்,அரணியல்பிரமற்கநந்தம்பெயரே. ஆ-௨௭

இந்திரன்பெயர் — புரந்தரன் புனிதன் பொன்
றவன், வாசவனமரர்கோன் மாஞ்சுனாசீ
நாயகன்விண்முழுதாளி,ஆயிரங்கண்ண ன

யிராணிகேள்வன், மருத்துவன்மகவான் வலாரிவிரு
த்திராரி,வெள்ளைவாரண னிமையவர்வேந்தன், பாக
சாசன னாகண்டலனே, வச்சிரபாணி சதக்கிருதென்
றிவைஎச்சமிலிந்திரற் கியன்றதொல்பெயரே. ஆ-௨௧

கணபதியின்பெயர்— ஒற்றைக்கொம்பன் விநா
யகனைங்கரன், வெற்றியானை முகவன்கணபதி, பாசா
ங்குசதர னாகுவாகநனே ஆ-௬.

முருகன்பெயர் - முருகன்சூர்ப்பகைசெட்டிகு
மரன், அறுமீன்காதலன் சேவலன்கொடியோன்,கார்
த்திகேயன் கடம்பன்சுவாமி, வேலுடைக் கடவுள்
மேலவர்க்கிறைவன், வரையகவெறிந்தோன் வள்ளிம
ணாளன், அரன்மகன்குறிஞ்சிமன் சரவணத்துதித்தோ
ன்,அறுமுகன்விசாகன்குகன் சேய்செவ்வேள், தேவர்
சேனாபதி மயிலாளிசேந்தன், கந்தன்காங்கேயன்வே
ளெனச்செப்புவர். ஆ-௨௬.

காமன்பெயர் - வேனிலாளி வேண்மதனனங்
கன்,மாரன்பூவாளி மன்மதன்கந்தர்ப்பன், பஞ்சபா
ணன்கருப்புவில்லி, இரதிகாதலன்மகரமுயர்த்தோன்,
திருமால்புதல்வன் வசந்தனென்றிவை, வருமால்கா
மற் கியன்றவன்பெயரே. ஆ-௰௪

வைரவன்பெயர் — வைரவன்காரி வடுகக்க
டவுள். ஆ-௨

ஐயனார்பெயர்—கோழிக்கொடியோன் சாதவா
கனன்,காரிசாத்தன் கடனிறவையன் ஆ-௪

வைச்சிரவணன்பெயர் — மந்திரிகுபேரனி
திக்கோனியக்கன், பிங்கலனரற்குப் பிரியாத்தோழ
ன், வடதிசைத்தலைவனியக்கர்வேந்தன், அளகைபாளி

யாயமுற்காவலன், புட்பகவூர்தி தனதன்மரகதனென
வைப்பநாமம் வைச்சிரவணற்கே.
ஆக-௰௯

அருகன்பெயர் — அருகனசல னிர்குணனபயன்
அமைபவனறிவ னதிசயனமலன், பூரணன்புங்கவன்
புணர்மூக்குடையோன், அசோகுடைச்செல்வ னண்
ணறத்துவன், ஆதியங்கடவு ளறவாழியந்தணன், ஆதி
யனைச்செல்வ னருளாழிவேந்தன், பஞ்ஞவன் பகவ
னெண்குணன்மாசேனன், விண்ணவன்றேவன் விற
லோன்விளங்கொளிப், பொன்னெயிஞ்தன் பூமிசை
நடந்தோன், முனைவன்வீரன் முதல்வன்புனிதன், காம
ற்காய்ந்தோன் கமலவூர்தி, சிநேந்திரன்றிகம்பரன்சா
ந்தன்புண்ணியன், மூர்த்தியாசான் முழுதொருங்கு
ணர்ந்தோன், வரதன்சினன்வர னென்றிவைமுதலா
வருகற்கின்னு மநந்தப்பெயரே.
ஆக-௬௰.

புத்தன்பெயர் — அண்ணல்வாம னருங்கலைநா
யகன், புண்ணியமுதல்வ னாதிபுங்கவன், பாரின்மிசை
யோன் சாந்தன்புனிதன், பகவன்சைன னறவன்மூர்
த்தி, போதிவேந்தன் ஜினவரன்புத்தன், ஏகதேவன்
முக்குற்றங்கடிந்தோன், அருணெறிசுரக்குஞ் செல்வ
னனந்த, லோசனன்வளர்ந்த பூமிசைநடந்தோன், அக
ளங்கன்மூத்தன் புண்ணியமூர்த்தி, பஞ்சதாரைவிட்
டவுணர்கூட்டிய, வெஞ்சலில்பெருமாற் கின்னவும்
பலவே.
ஆக-௨௫

நமன்பெயர் — அந்தகன்றருமன் றென்றிசை
முதல்வன், சண்டன்மறலி கூற்றுச்சமன்ஞமன், செங்
கோற்கடவுளியமனென்றிவை, தங்கியநமன்மேற்றரு
ம்பெயராகும்
ஆக-௰.

காலன்பெயர்—சண்டனுமறலியுங் கூற்றுஞ்சம
னுமென், றிந்தவகைப்பேர்காலற்குமாகும். ஆ-௪.

உமையவள்பெயர் — காமக்கோட்டி யம்பிகை
கௌரி, ஆரியைசத்தி யயிராணிபார்வதி, இமயவல்லி
யுமையள்பேரே. ஆ-௮.

கங்கையின்பெயர்—பகீரதிசானவிவரநதிசுரநதி
திரிபதகைமந்தா கினியிவைகங்கை. ஆ-௯

காடுகாள்பெயர்— காடுகாண்மோடி காரிதாய்
கொற்றி, மாரிசூரி வடுகிழுதணங்கே ஆ-௭.

திருமகள்பெயர் — பொறிமாவாக்கஞ் செல்வி
பொன்பூமகள், செய்யாளிந்திரை திருமகள்பெயரே
கமலைபதுமை விமலைகோகநகை,யனையவுமவள்பெய
ராகுமென்ப. ஆ-௰௨.

சரஸ்வதியின்பெயர்—பாரதிவாணி பனுவலாட்
டி, வெண்டாமரையாள்வெள்ளைமேனியாள், நான்முக
ல்கிழத்திநாமகள்கலைமகள், உலகமாதா வூர்பூரவாகதி
ஞானமூர்த்தி நற்பாமடந்தை, சாவித்திரியேகாயத்தி
ரியென, வாக்கின்செல்வியை நோக்கியபெயரே-௰௪.

சேட்டையின்பெயர்—முகடிதௌவைகலதிமூ
தேவி, காக்கைக்கொடியாள் கழுதைவாகனி, கேட்
டைகேடலணங்கு சேட்டைபெயரே. ஆ-௮

இந்திராணியின்பெயர்—சுந்தரிசசியேயயிராணி
புலோமசை,இந்திரன்றேவிக்கெய்தும்பெயரே ஆ-௪

காளியின்பெயர்—சூலியெண்டோளி தாருகவி
நாசனி, மாதரிவீரி கௌரிமுக்கண்ணி, பைரவிகுமா
ரி சாமுண்டிசண்டிகை, யோகினிவேதாளி யாமளை
மாகாளி. ஆ-௰௪

பகவதியின்பெயர்—கொற்றவையையை கார்த்
திகைகௌரி, துர்க்கைசூலி மகிடற்காய்ந்தாள், நீலி
யெண்டோளிவிந்தைசயமகள், இருங்கலைப்பூர்தியெழி
லரியேறி, மேதித்தலைமிசை விசையையத்தரி, மாலுக்

கிளையாள் சக்கராயுதியே, பாலைக்கிழத்தி பண்ணைப்ப ணைத்தி, நாராயணியே கன்னிகுமரி,சீர்சால்பகவதி சி றந்ததொல்பெயரே. ஆ-௨௨

இடாகினியின்பெயர் — வஞ்சனிமாயவள் வல லையிடாகினி. ஆ-௩

யோகினியின்பெயர் — சந்மினிசூர்மகள்யோகி னியாகும். ஆ-௨

அமரர்மாதர்பெயர் — அரம்பைய ரரமகளி ரம ரர்மாதர் ஆ-௨

தெய்வப்பெண்பொதுப்பெயர் — அணங்குஞ் சூருந் தெய்வப்பெண்பொதுப்பெயர். ஆ-௨

தேவர்கள்பொதுப்பெயர் — வானவரிமையவர் விண்ணவர்கடவுளர், அமரர்சுரர்புலவ ரண்டர்புத்தே ளிர், ஐம்பரும்பர் தேவர்கள்பொதுப்பெயர், ப [illegible] வர்பகவர் தீர்த்தர்பட்டாரகர், புங்கவரெனவுங் கடவு ளர்பொதுப்பெயர். ஆ-௰௪

அசுரர்பெயர் — தாநவரவுணர் தருவர்தைத்தி யரொன், றினையநான்கு நிசாசரருமசுரர். ஆ-௫

மாவலியின்பெயர் — வைரோசனனே மாவலி யவுணன் ஆ-௨

இராக்கதர்பெயர் — அரக்கரிராக்கதர் நிசாசரர் நிருதரொன், றுரைத்தநான்கு மொன்றன்பால, சால கடங்கடரும் பிசிதாசனரும், யாதுதானவரு பவ்வி னத்தவரே. ஆ-௮

வித்தியாதரர்பெயர் — விஞ்சையர்கேசரர் வித் தியாதரர்பெயர் ஆ-௨

கந்திருவர்பெயர் — தந்திரர்கிந்நரர் வீணைவல்ல வர், கந்திருவர்பெயரெனக் கருதல்வேண்டும். ஆ-௭

பூதகணத்தின்பெயர் - சாதகங்கிருத்திமங் குறள்கூ ளிபாரிடம்,பூதகணமெனப் புகன்றனர்புலவர் ஆ-௪

பேயின்பெயர் — கழுதுசோகு கடிகண்மன்

ணை, பைசைகூளி பிசாசுவேதாளம், பிரேதகஞ்சவோ
டிணங்குருணபாசியென், றினையவீராறும் பேயென
ல்வேண்டும் ஆ-௰௨

ஆகாசத்தின்பெயர் - அந்தரமாசினி யம்பரம
ங்குல் அண்டம்வானங் ககனமீ வெளி, விண்ணுகமாகு
ம் விசும்புதலையும்ப, ரிடங்குடிலென்றுங் கிவைபதி
னேழு, மடங்கலிலாகாயப்பெயராகும் ஆ-௰௭

காற்றின்பெயர் - வாதங்கூதிர் வங்கூழ்கால்வளி
பூதையனிலங் கோலைதநீழல், உலவைமாருத மருத்
துப்புவனம், வாடையொலியே கூதையுயிர்ப்பே,
வெற்றலங்கொண்டல் கோடையென்றிருபதுங், காற்
றின்பெயரெனக் கருதல்வேண்டும் ஆ-௨௰

பனிகாற்றின்பெயர் - கூதிருழதையுங் குளிர்
பனிக்காறே ஆ-௨

வடகாற்றின்பெயர் - வாடைவடந்தை வடகாற்
றாகும். ஆ-௨

மேல்காற்றின்பெயர் - கோடைமேல்காற்று. ௧

கீழ்காற்றின்பெயர் - கொண்டல்கீழ்காற்று. ௧

தென்றலின்பெயர்- மந்தாநிலமேமலயக்காலே
தென்கால்வசந்தன் தென்றலென்றிசைப்பர். ஆ-௪

சுழல்காற்றின்பெயர் - சூறைசாரிகை சுழன்றெ
ழுகாற்றே. ஆ-௨

நெருப்பின்பெயர் - அழலங்காரகனங்கிகனலி,
எரிதழறபரன் பாவகன்றீயனல், செஞ்சுடர்பகவன்
ஞெகிழியுதாசனன், உதவகன்தனஞ்சயன் வசுவெழு
நாவரி, தென்கீழ்த்திசையோன்வன்னிதேயுவென், றின்
னவைபிறவு நெருப்பின்பெயரே. ஆ-௨௧

வடவாமுகாக்கினியின்பெயர் - உத்தரமடங்க
லூழித்தீயென, வைத்தகடையனல்வடவாமுகமே. ௪

விளக்கின்பெயர் - தீபமுஞ்சுடரும் விளக்கெனச்
செப்புவர். ஆ-௨

அனற்பொறியின்பெயர்-புலிங்கமனற்பொறி.க
அனற்றிரளின்பெயர் - உற்கமனற்றிரள். ஆ-க
காட்டேரியின்பெயர் - தாவங்காட்டேரி.ஆ-க
தீக்கடைகோலின்பெயர்- அரணிஞெலிகோ றீக்கடைகோலே. ஆ-உ
தீக்கடவுளின்பெயர் — பாவகனத்தீக் கடவுள் பெயரே. ஆ-உ
நீரின்பெயர் - அறனும்புனலுமப்பும்பாணியும் உதகமுங்கமலமு மமுதமுங்கவந்தமும், பயமுஞ்சலிலமு மயமுமளகமும், புவனமும்வனமுங்கோவுங் கீலாலமுங்,காண்டமுந்தோயமுநாரமுநீரே.ஆ-யச
வெள்ளநீரின்பெயர் — நீத்தம்பிரளயம் வாரிவெள்ளநீர். ஆ-உ
புனற்கரசன்பெயர்—மற்றப்புனற்கரசன் வருணனாகும். ஆ-உ
அருக்கன்பெயர் — வெய்யோனிருள்வலி பதங்கன்சூரியன், சுடரவன்றரணி யுதயனுதவன், எல்லைமார்த்தாண்டன் றினகரன்பனிப்பகை, பரிதிசெங்கதி ரலரிபானு, வெஞ்சுடர்க்கிரணன் பகலவன்வேந்தன், ஆயிரங்கதிரோனழலவன்றிவாகரன், இரவிபாற்கரனென் றாழருணன், ஆதித்தன்கனலி ஞாயிறுவிரிச்சின்,சான்றோனரியே தபனனென்றினையவு, மான்றவருக்கற் கதிர்தம்பெயரே. ஆ-ஙங

சந்திரன்பெயர்—அம்புலிதிங்கள் குபேரனருச்சிக,னிசாகரனிமகர னுலோன் களங்கன், றண்சுடர்க்கலையோ னிராக்கதிர்தானவன், வியோமத்துபெதி யமுதகிரணன் இந்துசோமன்பிறைமதிசசிவிதுவென, வந்தனபிறவு நிலவுஞ்சந்திரன். ஆ-உய.
செவ்வாயின்பெயர் — அங்காரகன்குச னாரல்வக்கிரன், மங்கலனென்றிவன் செந்நிவண்ணன், பூம

னிலமகன் குருதிசேய்செவ்வாய், நாமமென்று நவி
ன்றனர்புலவர். ஆ-௰௩

புதன்பெயர் - அருணன்றாதுவ னனுவழிமே
தை, மதிமகன்பாகன் மாலவன்கணக்கன், புந்திபுலவ
ன் பண்டிதன்சௌமியன், சிந்தைகூரியோ னறிவன்
புதனென, வந்தநாம மற்றவற்காகும். ஆ-௰௪

வியாழத்தின்பெயர் — மந்திரியாசான் பீதகன்
சுரகுரு, அந்தணனரச ஞண்டளப்பான் பிரகற்பதி,
சுந்தரப்பொன்குரு மறையோன்வியாழம். ஆ-௰௫

சுக்கிரன்பெயர் - பளிங்குபார்க்கவன் புகர்புய
ன்மழைக்கோள், விளங்குதிங்கள் பிரசுரன்சல்லியன்,
ஒள்ளியொன்சுங்க னசுரமந்திரியென, வெள்ளிசுதன்
பிருகு சுக்கிரன்பெயரே. ஆ-௰௬

சனியின்பெயர் - மந்தன்காரி கரியோன்முடவ
ன், அந்தணனீலன் கதிர்மகன்கீழ்மகன், பங்குமேற்
கொள் சௌரிமுதுமகன், சந்துல்சாவகன் சனியின்
பெயரே. ஆ-௰௭

இராகுவின்பெயர்இராகுக்கோள்கரும்பாம்பு
கேதுவின்பெயர் கேதுக்கோள்செம்பாம்பு. ௧

அனந்தன்பெயர் - அனந்தன்பெயரே சேடனு
கும். ஆ-௨

மேடவிராசியின்பெயர்- வருடையுதடகர் மறிமை
கொறியென, விரியுமாட்டின்பெயர் மேடவிராசி. ௩

இடபவிராசியின்பெயர் - பாறல்புல்லம் பாண்
டில்பசுமூரி யேறுமுதல்வந்தன விடபவிராசி ஆ-௩

மிதுனத்தின்பெயர் — பாடவையாடவை இரட்
டைசவைமகன், மேவுமியாழ்ப்பல்பெயர் தன்மே
மிதுனம். ஆ-௩

கர்க்கடகத்தின்பெயர் — அலவனள்ளி குளிர்
ஞெண்டார்மதி, கள்வ னன்றிவை கர்க்கடகப்பெ
யரே. ஆ-௩

சிங்கத்தின்பெயர்—அரிமாபுலிவை யாந்நம்யாளி, தெரியிற்புலிசீயப் பல்பெயர்சிங்கம். அடி-௪

கன்னியின்பெயர்—பெண்மைப்பெயரே கன்னிக்குமாகும். அடி-௨

துலாத்தின்பெயர்—நிறையேகட்டளை வாணிகனிறுப்பான், துலையேகோலெனத்துலாப்பெயர்பெறுமே. அடி-௪

விருச்சிகத்தின்பெயர்—தெருக்கால் பறப்பன் றேளேவிருச்சிக, நலமென்பெயருந் தேளின்மேற்றே. அடி-௪

தனுவின்பெயர்—சாபங்காண்டுவந்தனுவின்பெயரே. அடி-௨

மகரத்தின்பெயர்—மானேகலைசுறா மகரப்பெயரே. அடி-௨

கும்பத்தின்பெயர்—குடமேசாடிப்பெயர்கும்பம். அடி-௨

மீனத்தின்பெயர்—மீனமீனின் பலபெயர்பெறுமே. அடி-௨

அச்சுவினியின்பெயர்—இரலையைப்பசி யாமேழுதலையினுள், புரவியருத்துவநா ளச்சுவினி யென்ப அடி-௪

பரணிநாளின்பெயர்—காடுகிழவோன் பூதமடுப்பே, தாழிபெறுஞ்சோறு தருமனுள் போதமெனப், பாகுபட்டது பரணிநாட்பெயரே. அடி-௮

கார்த்திகையின்பெயர்—அங்கியார லளக்கரளகிழல், பொங்கியநாட லுவிதன்வாணன், நக்கொளியறுமீன் நழனுள்கார்த்திகை. அடி-௬

உரோகிணியின்பெயர்—பண்டிபார்சகடு சாகாடுவைய,மொண்டிநறுருடோபனுனுரோகிணி அடி-௪

மிருகசீரிடத்தின் பெயர்—மாழ்குபேராளன்

மான்றலையிந்திரன், மார்கழிநரிப் பொழுதெனப் ப
ன், பாலைவெய்யோன் மிருகசீரிட ஆ-௯

திருவாதிரையின்பெயர் — ஏன்னது நெரிநலு
மீசர்திரையெனவாதிரைதன்பெயர ஆ-உ

புனர்பூசத்தின்பெயர்-அதிதியையும் பின்றையும்
பாவனம்பாலை, புனிதம்பிண்டிபுநர்தட ஆ-உ

௰-க

பூசநாளின்பெயர் — கொடிறு காற்குளத்துக்
குருநாள்வண்டு, புணர்வதாகும் பூசநாட்பெயரே ச

ஆயிலியத்தின்பெயர் — அரவிநாள்கௌவை யா
யிலியப்பெயர் ஆ-உ

மகத்தின்பெயர் — வேட்டுவன் கொடுநுக மெ
மூவாயெழுஞ்சனி, வாய்க்கால்பிதிர்நாண் மாசிமகமா
கும். ஆ-ச

பூரத்தின்பெயர் — இடையதெழுஞ்சனி பெலி
யேதுர்க்கை, பகவிநாளுவிதன்கணையேபூரம் ஆ-ச

உத்தரத்தின்பெயர் - பங்குனிகடைய தெழுஞ்
சநிபாற்குநி, மானேறுகதிர்நாளுத்தரமாகும். ஆ-ரு

அத்தத்தின்பெயர் — கைம்மீன் காமரங் களிறு
கௌத்துவ, நவ்விகன்னி யைவிரலத்தம். ஆ-எ

சித்திரைநாளின்பெயர் - நெய்வான் மீன்சுவை
பயற்றெழுநேர்வான், செவ்விநிற்றுவட்டநாள் சித்தி
ரையென்ப. ஆ-௯

சோதிநாளின்பெயர் - விளக்கேவீழ்க்கைவளு
நுகமாக்கா, றுளக்கமிலதிலநாள் சோதிநாளாகும் ௫

விசாகநாளின்பெயர் - முறமேமுற்றில்வைகாசி
யனில்நாள், பெறுமேசுளகு விசாகநாட்பெயரே ௫

அநுடத்தின்பெயர் பனைதேள்பெண்ணை புற்று
ளியோர்த்தை, மித்திரநாளினை யநுடப்பெயரே. எ

கேட்டையின்பெயர் - துலங்கொளி வல்லாரை

ளந்த விந்திரநாள் பின்றக கேட்
ஆ-ரு

யர் - கொக்கே கேட்கடை குரு
ந்றமானியகாநாண்மூலம், ஆ-எ

பெயர் - உடைகுளமுற்குள நீர்நா
ஆ-ங

உத்தராடநாளின்பெயர் - ஆடியாணி கடைக்கு
ம் விச்சுவநாள் நாடிலுத்திராட நாளாகும்மே, ச

திருவோணத்தின் பெயர் - நலத்தகுவயிர நள்
ளேசிரவண,மூலக்கைசோணமாயோணோணம் ங

அவிட்டத்தின்பெயர் - ஆவணிகாக்கை பறவை
புள்வசுநாண், மேவியவிட்ட மீனின்பெயரே. ஆ-ரு

சதயநாளின் பெயர் - குன்றுபோரோ சுடைடன்
பெருஞ்செக்கு, தங்குவருணனுள்சதயநாளாகும் ரு

பூரட்டாதியின்பெயர் - பூரட்டாதிமுற்கொழுங்
கோல்பூரட்டாதி,புரைப்பர்நாழியு மந்நாளுடனே ங

உத்திரட்டாதியின் பெயர் - முரசுபிற் கொழுங்
கோன் மன்னனிம்மூன்றினோ, மேலொசெய்யறிவனுரு
த்திரட்டாதி ஆ-ச

இரேவதியின் பெயர் - தொழுவேநாவாய் தோ
ணிகுலம், பஃறிபுருடநாள் கடைமீனிரேவதி ஆ-எ

அருந்ததியின் பெயர் - அருந்ததிசாலி வடமீ
னுகும். ஆ-உ

வான்மீனின் பெயர் - உடுத்தாராகண மொளி
வான்மீனே. ஆ-உ

காலநுட்பத்தின் பெயர் - துடியுங்கலையுந்தொ
டர்காலநுட்பம் ஆ-உ

நாழிகையின் பெயர் - கன்னலு மிருத்தையுங்
கடிகையும் பதமுஞ், சொன்ன விகலையு நாழிகைத்
தொல்பெயர் ஆ-ரு

பொழுதின்பெயர் - வேலையு மமையமுங்காலை

யும்பதமும், எல்வையுங்காலமும் பொழுதெனப் ப
டுமே. ஆ-௬

முன்னைநாளின் பெயர் - நென்னலு நெருநலு
முன்னைநாளாகும் ஆ-௨

பின்னைநாளின்பெயர் - பிற்றையும் பின்றையும்
பின்னைநாளாகும். ஆ-௨

உச்சியின்பெயர் - நண்பகலுச்சி ஆ-௧

சந்தியின்பெயர் - அந்திசந்தி. ஆ-௧

சாமத்தின்பெயர் - யாமஞ்சாமம். ஆ-௧

பகலின்பெயர் - எல்லேபகலாம். ஆ-௧

வெயிலின் பெயர் - என்றாழாதபம் வெயிலெ
னப்படுமே. ஆ-௨

சந்திரிகையின் பெயர் — நிலவுசந்திரிகையாகு
மென்ப. ஆ-௧

இரவின் பெயர் - எல்லியுங் கங்குலும் யாமமு
மாலையும், அல்லுமங்குலு மிரசனியுமல்கலும், யாமி
னியுநிசியு மெல்லுமிரவே, ஆ-௰

இருளின்பெயர் - திமிரநத்த நீலமதனொடு, தி
மிரமுந்தமமு மிருளாகும்மே. ஆ-௫

நாளின்பெயர் - பகலும்வைகலுந்திவசமுந்தின
மும், ஆனியமுந்திவாவு நாளாகும்மே ஆ-௬

அருணோதயத்தின் பெயர் - வைகறை விடியல்
புலரியருணோதயம். ஆ-௪

திதியின்பெயர் - திதியேபக்கம். ஆ-௧

மாதத்தின்பெயர் - மதியேதிங்கண்மாதமாகும். ௧

முதற்பக்கத்தின்பெயர் - பக்கமுதலது நந்தை
யாகும். ஆ-௧

இரண்டாம்பக்கத்தின்பெயர் - பத்திரையென்ப
திரண்டாம்பக்கம் ஆ-௧

மூன்றாம்பக்கத்தின்பெயர் - மூன்றேசயை பக்
கம். ஆ-௧

நான்காம்பக்கத்தின்பெயர் - நான்கேயிரித்தை. க

ஐந்தாம்பக்கத்தின்பெயர் - ஐந்தாம்பக்கம் பூரணையாகும். அடி-க

பாதிநாளின்பெயர் - அரைநாளும் பாறுளும் அத்தநாளும்பாதிநாள். அடி-௫

மாத்திரையின்பெயர்- கணமேமாத்திரை. அடி-க

நிகழ்காலத்தின்பெயர்.- வேலையென்பது நிகழுங்காலம். அடி-க

வெப்பத்தின்பெயர் - உருப்பம் வெப்பம் ஆறுமென்ப. அடி-க

கோடையின் பெயர் - வேனில்கோடை மிசைப்பேராகும். அடி-க

சிறுபொழுதின்பெயர் - ஒல்லைசிறுவரை சிறுபொழுதாகும். அடி-௨

அறுவகைப்பருவமாவன - காரேகூதிர்முன்பனி பின்பனி, சிரீளவேனின் முதுவேலென்றும், இருமூன்றாவகைப்பருவமவைதாம், ஆவணிமுதலாவிரண்டிரண்டாக,மேவினதிங்களெண்ணினர்கொளலே அடி-௬

பனியின்பெயர் - இம்முந்துகினமு மஞ்சுநீகாரமும், பனியின்பெயரெனப் பகரப்படுமே. அடி-௭

கார்காலத்தின்பெயர் - காரொனுங்காலப் பெயரீசார்ற்காலம். அடி-க

கூதிர்காலத்துக்கும் - பனிக்காலத்துக்கும்பெயர் - கூதிர்காலமுங் குளிர்பனிக்காலமும், ஆருமென்ப சிசிரநாளே. அடி-க

பருவத்தின்பெயர் - ஆனியமுமிருதுவும் பருவமாகும். அடி-௨

காலமாவனபருவமும்யாண்டுங்காலமாகும் அடி-௨

யுகத்தின் பெயர் - ஊழியுமுறையுகு முகமாகும்மே. அடி-௨

யுகமுடிவின்பெயர் - ஊழியுமடங்கலுமுகமுடிவாகும் ஆ-உ

நான்முகன் வாழ்நாளின்பெயர் - நான்முகன்வாழ்நாள் கற்பமாகும். ஆ-க

வாழ்நாளின்பெயர் - ஆயுளாயுகம் வாழ்நாளெனப. ஆ-உ

மேலின்பெயர் - மேற்குவலமீ யும்பர் மேலாகும். ஆ-உ

கீழின்பெயர் - கிழக்குக்கீழே. ஆ-க

வருடத்தின் பெயர் - தூவலைபெயலை துளியேமாரி, புறைபெயலாலி யுதகஞ் சிதறி, தூவல்சீகரந் தூறல்வருடம். ஆ-௰உ

மேகத்தின்பெயர் - மேகஞ்சீதம் விசும்புவான் விண்முகில், கொண்மூமஞ்சு கொண்டன்மைம்மழை எழிலிகார்குயின் சுந்தரம்விண்டு, மங்குன்மால்செல் கனமும்வளையாரீ. ஆ-அ

இடியேற்றின் பெயர் - உருமுஞ்செல்லும்சனி யுமுருமேறும் இடியும்வானேறு மிடியேற்றின் பெயரே ஆ-சு

மழைபெய்து விடுதலின்பெயர் - தலையலென்பது மழைபெய்துவிடுதல். ஆ-க

விடாதுசொரிதலின்பெயர் - சோனையும் பனித்தலும் விடாதுசொரிதல். ஆ-உ

பெருமழையின்பெயர் - ஆசாரமென்பது பெருமழையாகும். ஆ-க

துளியின்பெயர்-துளிபெயலாலி புறைதுளியாகும். ஆ-ச

ஆலங்கட்டியின் பெயர் - ஆலியாலங் கட்டியாகும். ஆ-க

துவலையின்பெயர் - சீகரந்திவலை சிதாரிசீகரந் துவலென்றிவை துவலையாகும், ஆ-சு

மின்னின்பெயர் - தடித்தாத்தடிமின் ஆூ-க
இடியின்பெயர் - இடிப்பெயரிருளே. ஆூ-க
பரிவேடத்தின்பெயர் - ஊர்கோள்வட்டம்பரி வேடப்பெயரே. ஆூ-௩

இந்திரவில்லின் பெயர் - வானவில்லிந்திர வில் லெனவறைவர். ஆூ-உ

காமன்காண்டவத்தின் பெயர் - காமன் காண்டவங் கருப்புவில்லாகும். ஆூ-உ

திவாகரவரலாறு.

---

வடநூற்கரசன் றென்றமிழ்க்கவிஞன் கவியரங் கேற்று முபயகவிப்புலவன், செறிகுணத்தம்பற் கிழவோன்சேந்த, னறிவுகரியாகத் தெரிசொற்றிவாகரத்து முதலாவது, தெய்வப்பெயர்த் தொகுதி முற்றிற்று.

---

இரண்டாவது,

## மக்கட்பெயர்த்தொகுதி.

---

மூலபாடம்.

அருந்தவர்பெயர் - தாபவோரையர்-மாதவர்முனிவர், அறவோர்நீத்தோ ரறிஞருயர்ந்தோர் தாபதர் மெய்யர் தவத்தர்தபோதனர், முனைவரிருடிகள் படிவர்பண்ணவர், யோகிகள்கடிந்தோர் பெரியோருறுவரொன், முகியவந்தன ரருந்தவர்பெயரே. ஆூ-உக

சைவதவப்பாலோர்பெயர் - மாவியதியருங்காளாமுகரும், பாசுபதருஞ் சைவதவப்பாலோர் ஆூ-௩
நாராயணசமயத்தோர்பெயர் - நாராயணசமயத்தோர் பாகவதரே. ஆூ-க

சமணர்பெயர் - சாவகராருகர் சமணராகும்,ஆசீ
வகருமத் தவத்தோரே. ஆ-௩

புத்தர்பெயர் - புத்தர்சாக்கியர் தேரர்பௌத்
தர், வைத்தசிவ கருமத்தவத்தோரே. ஆ-௪

சமணமுனிவர்பெயர் - சாரணர்சமண முனிவ
ராகும். ஆ-௧

சடைமுடியோர்பெயர் - தாபதர் சடைமுடி
யோர். ஆ-௧

பார்ப்பார்பெயர் - ஐயர்வேதியரிருபிறப்பாளர்,
மெய்யர்மிக்கவர்மறையோர்பூசுரர்அந்தணர்நூலோ
ரறுதொழிலாளர்,செந்தீவளர்ப்போருயர்ந்தோராய்
ந்தோர், ஆதிவருணர் வேதபாரகர், விப்பிரர்தொழு
குலத் தோர்வேள்வியாளர், முப்புரிநூலோர் முனிவ
ரென்றிவைதப்பில்பார்ப்பார்தம்பெயராகும்ஆ-௨௰

நூலுணர்ப்போர்பெயர் - கணக்காயர்நூலுணர்
ப்போர் ஆ-௧

கலைவல்லோர்பெயர் - கவிஞர்கலைவல்லோர். ௧

அறிவுடையோர்பெயர் - சான்றோர்மிக்கோர்
நல்லவர்மேலவ, ராய்ந்தோருயர்ந்தோ ராரியருலகெ
ன, வாய்ந்தவன்றோ ரறிவுடையோரே. ஆ-௬

புலவர்பெயர் - கவிஞர்கலைஞர் கற்றவர்மேதை
யர், சவையேசங்க முதுவோர்மூத்தோர் அவையே
யறிஞர் புதரேபுலவர் ஆ-௭

மிகவல்லோர்பெயர் - விபுதர்நிபுணர் குசலர்
மிகவல்லோர். ஆ-௨

மூத்தோன்பெயர் - அடிகளத்தனையனாசான்,
குரவன்சாமி, கோமான்பெருமா னாரவோனீச, னி
றைவன் றலைவன், விரவுபதிநாதன் மூத்தோன்பெ
யரே. ஆ-௮

பெருமையிற்சிறந்தோன்பெயர் - அண்ணலுங்

குரிசிலு மேந்தலுந்தோன்றலுஞ், செம்மலும் பெரு
மையிற் சிறந்தோன்பெயரே. சூ-௫

எப்பொருட்குமிறைவன்பெயர் - நாதனாயக
னதிபன்காந்தன், பதிங்காளீசன் செம்மலிறையே,
தலைவன்மன்னவன் பிரானேகொழுனன், அரசனுதி
யெனப்பதினைந்தும் உரைசெயெப்பொருட்குமிறை
வன்மேற்றே. சூ-௰௫

உயர்ந்தோர்பெயர்-உலகமென்ப துயர்ந்தோ
ர்மாட்டே. சூ-௧

திரண்டோர்பெயர் - சங்கமுங்குழுவுங் கூட்ட
முங்கணமுந், தங்கியதொகுதியுஞ் சவையுமவையுங்,
இங்கிவைதிரண்டோர் யாவர்க்குமுரிய சூ-௭

அரசன்பெயர் - புரவலன் கொற்றவன் பெரு
மான்காவலன், அரையனேந்தல் கோவேகுரிசில், தலை
வன்மன்னவன் வேந்தன்முதல்வன், நிருபன் பூபால
னரபதியார்த்திவன் இறைவனண்ண லெனப்பதினெ
ட்டும், அரசன்றன்பெய ராகுமென்ப சூ-௰௮

குருகுலத்தரசர்பெயர் - பரதர்கௌரவர் குரு
குலத்தரசர். சூ-௨

கோச்சேரன்பெயர் - பூழியனுதியன் கொங்க
ன்பொறையன், வானவன்குட்டுவன் வானவரம்பன்,
வில்லவன்குடநாடன் வஞ்சிவேந்தன், கொல்லிச்சில
ம்பன் கோதைகேரளன், பொருநின்கண்ணிக்கோன்
பொருனைத்துறைவன், சேரலன்மலயமான் கோச்சே
ரன்பெயரே சூ-௰௭

கோச்சோழன் பெயர் - சென்னி வளவன் கிள்
ளிசெம்பியன், பொன்னித்துறைவன் புலிக்கொடிப்பு
ரவலன், நேரியனார்த்தார்க் கோனேரிறையபயன், நே
ரிவெற்பன் கோழிவேந்தன், சூரியன்புனனாடன் கோ
ச்சோழன்பெயரே சூ-௰௪

கோப்பாண்டியன்பெயர்- செழியன்றமிழ்நாட்

ன் கூடற்கோதென்னவன், வழுதிமீனவன் பஞ்சவன்
மாறன், கௌரியன்வேப்பின் கண்ணிக்கோகைதவன்,
பொதியப் பொருப்பன் புனல்வையைத் துறைவன்
குமரிச்சேர்ப்பன் கோப்பாண்டியனே ஆக-௰௪

சளுக்குவேந்தர்பெயர் - வேள்புலவரசர் சளுக்குவேந்தர். ஆக-௧

குறுநிலவேந்தர்பெயர்-வேளிருப்புரோசருங்குறுநிலவேந்தர், அரட்டருங்குறும்பருமாகுமென்ப ச

மந்திரிக்கிழவர்பெயர் - முதுவர்குரவர் மூத்தோர்முன்னோர், உழையேர்சூழ்வோர் நூல்வல்லோர்; அமைச்சர்தேர்ச்சித் துணைவரொன்றுந், இசைத்த மந்திரிக்கிழவர்க்கெய்தும். ஆக-௯

நட்பாளர்பெயர் - இனப்பெயர்தன்னட்பாளர்க்கெய்தும். ஆக-௧

மந்திரித் தந்திரிக்குப்பெயர் - ஏனாதிகாவிதி யாமாத்தியரெனும்பெயர், ஆறுமந்திரித் தந்திரிக்கெய்தும். ஆக-௩

கருமத்தலைவர்பெயர் - வள்ளுவன்சாக்கை யெனும்பெயர்மன்னர்க், குள்படுகருமத்தலைவர்க்கொன்றும். ஆக உ

போர்த்தலைவர்பெயர் - பொரும்போர்த்தலைவர் பொருநரெனப்படும். ஆக-௧

பரிவாரத்தின்பெயர் - பரியாளமென்பது பரிவாரமாகும், ஆக ௧

செட்டிகள்பெயர் - இப்பர்பரதர் வைசியர்கவிப்பர், எட்டியரிளங்கோக்க ளோர்த்தொழிலர்பசுக்காவலர், ஒப்பிறைய்கர் வினைஞர்வணிகரென், ரத்தகுசிரேட்டிகள் செட்டிகள்பெயரே ஆக-௰௨

காராளர்பெயர் - வினைஞர்சூத்திரார் பின்னவர் சதுர்த்தர், வளமையர்வேளாளர் மண்மகள்புதல்வர்;

தொழிலோர் வங்களமருழவர், சீர்த்த
ழ்நர்காராளர். ஆக ௰௧

மிலேச்சர்பெயர் - மிலேச்சாரியர். ஆக-௧

சோனகர்பெயர் - யவனர்சோனகர். ஆக-௧

மருத்துவர்பெயர் - ஆயுள்வேதியர் மாமருத்து
வனூலோர், மாமாத்திரரோ பிடகர்மருத்துவர் ஆக-௪

கைக்கோளர்பெயர் - தந்துவாயர் காருகர்கைக்
கோளர். ஆக-௨

குயவர்பெயர் - கும்பகாரர் குலாலர்வேட்கோ
வொன், றிங்கிவைகுயவர் மட்பலகைஞரொன்ப. ஆக-௪

உப்பமைப்போர்பெயர் - உமணரளவ ருப்ப
மைப்போரே. ஆக-௨

சித்திரக்காரர்பெயர் - ஓவியர்சித்திரக்காரரா
கும். ஆக-௨

கண்ணாளர்பெயர் - கம்மியர்யவனர் கொல்லர்
தபதியர், அக்கசாலையர் சிற்பியரதனொடு, வித்தகர்
வித்தியர் புனைவரறிவனொன், றத்தகுகண்ணாளர் பெய
ரானவறைவார். ஆக-௰

தச்சர்பெயர் - தபதியர்மரவினையர்தச்சரா
கும், ஆக-௨

கன்னார்பெயர் - கன்னுவர்கஞ்சக் காரர்கன்னார்
ஆக-௨

தட்டார்பெயர் - செங்கொல்லர்தட்டார் பொ
ன்வினைசெய்வோர். ஆக-௨

வண்ணார்பெயர் - ஏகாலியர்துசரீரங்கோலிய
ர், காழியர்வண்ணாராகக்கருதுவர். ஆக-௪

உறைகாரர்பெயர் - காரோடருறைகாரர். ஆக-௧

ஊன்விலைஞர்பெயர் - சூனருன்விலைஞர். ஆக-௧

தோல்வினைஞர்பெயர்-பறம்பர்தோல்விலைஞர் ஆக கூ

நாவிதர்பெயர்- பெருமஞ்சிகரோமயிர்வினைஞர்
நாவிதர் ஆக-௨

செக்கார்பெயர் - சக்கிரிதந்திகள் செக்கா-ளா
ரும் சூ. (க)

கள்விலைஞர்பெயர் - பழையர்துவசர் பம்வர்க
ள்விலைஞர் சூ. - ௬

சண்டாளர்பெயர் - குணுங்கர்வங்கர் கவுண்டர்
கனகதர், இழிஞர்கொலைஞர் புலைஞரொன்றுஞ், சிசை
யும்பெயர் சண்டாளர்க்கெய்தும் சூ. - எ

பாணர்பெயர் - செஞ்னியர்வைரியர் சூதர்மா
கதர், இன்னிசைகாரர் மதங்கர்பாணர் சூ. உ

பாடற்கிழ்மக்கள்பெயர் - பண்டருமோவரும்
பாடற்கிழ்மக்கள் சூ. உ

தமிழ்க்கூத்தர்பெயர் - வாயிலோரதமிழ்க்கூத்தர் க

கழைக்கூத்தர்பெயர் - வேழம்பர்கழைக்கூத்தர் க

தோற்கருவியிசைப்போர்பெயர் - இயவர்தோ
ற்கருவி யிசைக்குமாக்கள் சூ. க

நரப்புக்கருவிகொளற்குரியோர்பெயர் - ஞயி
லிவர்நரப்புக்கருவி கொளற்குரியோர் சூ. க

தொழில்செய்வோர்பெயர் - தொழுவர்கம்மி
யர் தொழில்செய்வோரே சூ. உ

புதியோர்பெயர் - அதிதியர்வம்பலர் புதியோ
ராகும் சூ. உ

மீகாமன்பெயர் - நீகான்மரக்கலன் மீகாமனாகும் உ

அயலோர்பெயர் - நொதுமலர்வம்பலரயலோ
ராகும். சூ. - உ

வழிச்செல் வோர்பெயர் - பதிகரொன்ப வழிச்
செல்வோரே. (க)

அடிமையின்பெயர்- ஆளுந்தொழும்புமடிமை
யாகும். சூ. - உ

மடையர்பெயர் - வாலுவர்கூவியர் மடையரா
கும். சூ. - உ

ஏவல்செய்வோர் பெயர் - சிலதர்சிலதியர் சே

சேடியர், பரிசன்முறைமையோ ரேவல்செயற்பா லார். ஆ-சா

தூதர்பெயர் - வினையுணாப்பாரும் வழியுலாப் பாரும், அனையபண்புணாப்பாருந்தூதர். ஆ-௩

ஒற்றர்பெயர் - சாரணருசாவே யொற்றறனச் சாற்றுவர். ஆ-உ

வெறியாட்டாளன்பெயர் - வேலன்முருகன்வெ றியாட்டாளன், தேவராளன் படிமத்தோனே ஆ-ச

செவிடர்பெயர் - செவிடர்வதியர் (க)

முடவன்பெயர் - முடவன்பங்கு. (க)

அலியின்பெயர் - பேடர்பேடியர் பெண்டகர் பெண்டனொன்,றாகிய நான்குமலிப்பெயராகும்ஆ-ச

ஊமையின்பெயர் - மூகையுமூங்கையு மூமை யாகும். ஆ-உ

குருடர்பெயர்- ஆதரந்த ரந்தகர்குருடர் ஆ-௩

கூனின்பெயர் - கூனேகோண லாமெனக்கூ றுவர் (க)

குறளின்பெயர் - சிந்தேகுஞ்சங் குறளேவா மநம் ஆ-௩

கீழ்மக்கள்பெயர் - கயவர்கனிட்டர் பூரியர்நீசர் சுமடர்பேதையர் தீயோர்மூடர் புல்லர்தேரார் கலர் பொறியற்றார் சித்தையர்சிறுமையர் கையர்கண்டகர் மூர்க்கர்திம்பர்மூகர்மூசண்ட ரென்றுக்கியபெயர்கீழ் மக்கட்காகும் ஆ-உ௰

அறிவிலான்பெயர் - முழுமகன்சிதட னிழுதை மூடன் மண்ணைமடன்பேதை குதலையுஞ்சுணு அறு ரோயாத னேழையறிவிலான் ஆ-௰௨

தரித்திரர்பெயர் - ஆதுலர்மறியோ ரில்லோரொ ளியர் உறுகணாளர்நல் கூர்ந்தோர்தரித்திரர் ஆ-சா

துயருற்றவோர்பெயர்- ஆர்த்தர் துயருறுவோர்

திருடர்பெயர் - கரவடர்சோரர் கள்வர்பட்டி

கள், கேளார்புரையோர் இருடராகும் அடி-ங

உரியோர்பெயர் - கிழவருரியோர் (க)

மூதுணர்ந்தோர்பெயர் - முதுவர் மூதுணர்ந் தோர் (க)

வல்லாளன் பெயர் - வயவன்மீளி வல்லாள னென அடி-உ

இறலோன்பெயர் - விறலோன்விடலை இறலோ ன்பெயரே அடி-உ

நகர்ப்பதிவாழ்நர்பெயர் நகர்ப்பதிவாழ்நர்சது ரர்நாகரிகர் அடி-உ

தூர்த்தர்பெயர் - விடரோகாமுகர் மிகுபோகம் விழையுனர் படிற்றொழுக்கர் காமத்துப்பாலோர்தூ ர்த்தர் அடி-ரு

கட்டிளமையோன்பெயர் - குமரன்காளை மழவன் சேடன் முருகன் கட்டிளமையோனெனமொழிப ரு

ஏவுவான்பெயர் - வியவனேவுவான் க

புகழாளன்பெயர் - இயவுள்புகழாளன் க

கரியோன்பெயர் - கள்வனென்கிளவி கரியோ னென்ப

கொண்டோற்பிழைத்துப்பெறும்புதல்வன்பெ யர் - கொண்டோற்பிழைத்துப் பெறும்புதல்வன்கு ண்டகன் க

கைம்மையிற்பெறும்புதல்வன்பெயர் - கோளிக் கைம்மையிற் பெறும்புதல்வன்கோளகன் க

கன்னியிற்பெறும்புதல்வன்பெயர் - கன்னியிற் பெறும்புதல்வன் கானீனனாகும் க

குலமுன்னோர்பெயர் - ஈலினரென்ப குலமு ன்னோரே க

வல்லோன்பெயர் - வலவைவல்லுநன் வல்லோ ன்பெயரே அடி-உ

வல்லுநரல்லோர்பெயர் - வல்லார்மாட்டாதார்
வல்லுநரல்லோர் ஆ-உ

கூவநூலோர்பெயர் - உல்லியர்கூவ நூலுணா
யுணர்வோர் க

கவிகள்பெயர் - நாவலர்கற்றோர் பாவலர்கவி
கள் ஆ-ரு

கடிகைமாக்கள்பெயர் - மங்கலப்பாடகரொட்ட
ர்கடிகைமாக்கள் ஆ-உ

கூத்தர்பெயர் - கோடியர்பொருநர் நாடகியர்
நிருத்தர் கண்ணுளர்வயிரியர் விலைஞர்நடரொன் றெ
ண்ணியபெயர்கள் கூத்தர்க்கெய்தும் ஆ-அ

புகழ்வோர்பெயர் - மாகதர்வந்தியர்சூதர்வே
தாளியர், பூகதர்பப்புவர் புகழ்வோர்பெயரே. ஆ-சு

தேர்ப்பாகர்பெயர் - சூதருய்வலவருந் தேர்த்
தொழிற்பாகர். ஆ-உ

யானைப்பாகர்பெயர் - ஆதோரணர்வா துணர்
யானைப்பாகர். ஆ-உ

குதிரைவடிப்போர்பெயர் - வாதுவர்பரிமா வ
டிப்போருமாகும். க

இரப்போர்பெயர் - இரவலரிரவோர் பரிசிலா
ளர், யாசகரொன்றிவை யிரப்போர்பெயரே. ஆ-ச

வளையாதுகொடுப்போர்பெயர் - வளையாது
கொடுப்போர் வள்ளியோராகும். க

தானைத்தலைவர்பெயர் - மானவர்வீரர் மறவர்
பொருநர், ஆனகவியர் மண்டர்மள்ளர், ஏனைவாளுழ
வ ரொளர்கூளியர், தானைத்தறுகண் ணாளர்தம்பெ
யரே. ஆ-ய

பகைஞர்பெயர் - தரியலர்தெவ்வர் மேலவர்செ
றுநர், கருதலர்சேரல ரிரிஞரொன்னர், ஒல்லாரரிக
ளைள்ளாரமாரர், ஒட்டார்புல்லார் நேரார்நிகரார்,ஒட்
டலர்நேரல ரிகலோரொதிர்ந்தோர், விட்டவர்மாற்ற

லர் முனைந்தோரென்றுங், கொட்டியபிறவு
மொன்றுரைப்பர். ஆக-௨௫

மேவினர்பெயர் - ஒல்லுநர் துன்னுந ரொட்டுந ரொன்றுநர், நண்ணுநர் தொடர்ந்தோர் மேவினர்நாமம். ஆக-௭

உறவின்பெயர் - ஒக்கல்சுற்ற முறைகிளைகேள், நட்புமேவினர் சார்ந்தவருற்றார், பந்தங்கூளி கடும்புகுடும்ப,ந்தமர்சிறந்தோர்நட்டோர்பரிசனம்.அந் தமிலுறவென் றறைந்தனர்புலவர். ஆக-௰௭

ஆண்பாலின்பெயர் — ஆடவர்மைந்தர் காளைகுமரர், ஆடூஉமாந்தர் மகன்புமான்மணாளன், கூடிய வாண்பெயராகக்கூறுவர். ஆக-௯

பெண்பாலின் பெயர் — பேதையங்கனை வனிதையிளம்பிடி, மாதுமடவான் மகடூஉமங்கை, மடந்தைகாரிகை மானினிமஞ்சனி, மாயோளாட்டி, பாவைதெரிவை, தையலரிவை பெதும்பை பிணாமகள் தையுநுண்ணிடை நாரியென்றுங், இருபதுமிரண்டும் பெண்பாற்கெய்தும். ஆக-௨௨

எழுவகைப்பருவப் பெண்பாலாவன — பேதை பெதும்பை மங்கைமடந்தை, அரிவைதெரிவை பேரிளம்பெண்ணென, வெழுவகைப்பருவப் பெண்பாற்கெய்தும். ஆக-௭

தலைவிபெயர் — கோமாள்பெருமாட்டி குறத்தி யையை, ஆசாள்சாமி யிறைமையாட்டி, அடிகளத்தை தலைவிபெயரே. ஆக-௯

அருந்தவப்பெண்பெயர் — பைம்மையுங்கௌந்தியு மருந்தவப்பெண்பெயர். ஆக-௨

கலன்கழிமகளிர்பெயர் — கைம்மையுங் கைனியுங் கலன்கழிமகளிர். ஆக-௨

மலடிப்பெயர் — மைம்மைவந்தி மலடிப்பெயரே. ஆக-௨

பொதுப்பெண்பெயர்—பரத்தையுங் கணிகையுஞ் சூளையும் பொதுப்பெண். அடி-௩

நாடகக்கணிகைபெயர்—நடியேகூத்தி நாடகக் கணிகை. அடி-௨

பாண்மகள்பெயர்—பாடினிவிறலிபாட்டிமதங்கி, பாடன்மகடூஉப்பாண்மகளாகும். அடி-௫

அணியிற்பண்பி னுவமை யொட்டுத்தன, வரைவிலாடூஉ மகடூஉப்பலபெயர், வரலாற்று முறைமையின் வந்தனகொளலே. அடி-௨

உடனிகழ்வான்பெயர்-எமியுடனிகழ்வான். (௧)

தனியின்பெயர்—தமிதனியாகும். (௧)

குறிஞ்சிநில மக்கள்பெயர்—குறவர் கானவர் குன்றவர் புனவர் இறவுளர் குறிஞ்சி நிலமக்கட் பெயரே. அடி-௫

குறிஞ்சிநிலப் பெண்கள்பெயர்—கொடிச்சியர் குறத்தியர் குறிஞ்சிநிலப்பெண்பெயர். அடி-௨

குறிஞ்சிக்கிறைவன்பெயர்—கானகநாடன்பொருப்பன்பொருநன், ஆனமலையன் வெற்பன் சிலம்பன், சிறந்தநன்ப னென்றிவைமுதலாக், குறிஞ்சிக்கிறைவன் பெயரெனக்கூறுவர். அடி-௭

பாலைநிலமக்கள் பெயர் - மறவரெயினர் பாலைநிலமக்கள். அடி-௨

பாலைநிலப் பெண்கள்பெயர் - மறத்தியரெயிற்றியர் வன்கட்பிணாக்கள், அனைத்து மனன்னிலத் தரிவையர்பெயரே. அடி-௩

பாலைக் கிறைவன் பெயர் - மீளியுங் காளையும் விடலையுமென்றிவை, பாலைக்கிறைவன் பெயரெனக் கூறுவர். அடி-௩

பாலைநிலமக்கட்கு மந்நிலத்தலைவர்க்கும் பொதுப்பெயர்—கொலைஞரெயினர் வனசரர்சவரர், சிலவர் கானவர் மாறுலவர்கிராதர். பளினர் மறவர் வே

டமொன்றுங், கனையவர் பொதுப்பெய ராதல்வேண்
டும். ஆ-௰

முல்லைநிலமக்கள்பெயர்—முல்லையாளர் கோவ
லரிடையர், சொல்லியவண்டர் பொதுவராள் வல்
லோர், குடவர்பாலர் தொறுவர்கோவிந்தர், அண்டர்
கோபாலராயரமுதர், ஒன்றியமுல்லை நிலத்தவர் பெ
யரே. ஆ-௰௪

முல்லைநிலமகளிர்பெயர்—ஆய்ச்சியர் தொறுத்
தியர் பொதுவியர்குடத்தியர், வாய்த்தவிடைச்சிய
முல்லைநிலமகளிர். ஆ-௫

முல்லைநிலத்தலைமகன் பெயர்— அண்ணலேறென்
றல் குறும்பொறைநாடன், கானகநாடன் முல்லைத்
தலைமகன். ஆ-௪

நெய்தநிலமாக்கள்பெயர்- பரதவர்நுளையர்கட
லர்வலையர், சலவர்திமிலர்நெய்தநிலமாக்கள் ஆ-௬

நெய்தநிலப்பெண்பெயர்—நுளைச்சியர்பரத்தி
யர் நுளைகடற்பிணுக்கள். ஆ-௯

நெய்தநிலத்துப்பமைப்போர்பெயர்- அளவர
ந்நிலத்துப் பமைப்போர்பெயரே (க)

நெய்தற் றலைமகன் பெயர்— கொண்கன்றுறை
வன் மெல்லன் புலம்பன், றன்கடற் சேர்ப்ப னெய்
தற்றலைமகன். ஆ-௫

மருதநிலமக்கள்பெயர்—களமர்தொழுவர் மள்
ளர்கம்பளர், வினைஞருழவர் கடைஞர் கிளைஞரொன்
றனையவைகழனிக் கடைத்தவர்பெயரே, ஆ-௮

மருதநிலப்பெண்பெயர்—உழத்தியர் கடைச்சி
ய ராற்றுக்காலாட்டியர், அடுத்தகழனிக் கடைத்தம
களிர். ஆ-௯

மருதநிலத்தலைவன்பெயர்— ஊரன்மகிழ்நன்கி
ழவனென்றிவை,சாலிமருதத்தலைவன்பெயரே ஆ-௯

மருதநிலத்தலைவி பெயர் — மனைவிகிழத்தி யில்லாளில்லள்,றனையவைமருதத்தலைவிக்காகும். ௪

முல்லைத்தலைவிபெயர் — அனையவை முல்லைத் தலைவிக்குமாகும். ஆ-௨

முன்றோன்றலின்பெயர் — முன்னை முன்னோனவன் முன்றோன்றலாகும். ஆ-௨

பின்றோன்றலின்பெயர் — பின்னை பின்னிளைவல் பின்றோன்றலாகும். ஆ-௨

சேட்டையின்பெயர் — தௌவைமுன் பிறந்தாள் சேட்டையாகும். ஆ-௨

தங்கையின் பெயர் — தங்கைபின்னை யெங்கையாகும். ஆ-௨

வழித்தோன்றலின் பெயர் — மருமான் பிறங்கடையும் புல்வழித்தோன்றல் ஆ-௩

இளம்பிள்ளைகள் பெயர் — குழவியுமகவுங் குட்டனும்பிள்ளையும், அழவுஞ்சேய பிளமைக்குவருத்தனர். ஆ-௫

பிள்ளைப்பன்மையின்பெயர் - மகாருஞ்சிறுமவர்பன்மைவழக்கே. ஆ-௨

தோழன்பெயர் - நண்பல்பாங்க னென்னுவன்கிளைஞன், றங்கியகேள்வன் றோழன்பெயரே. ஆ-௪

தோழன்முன்னிலையின்பெயர் - ஏடாவென்பது தோழன்முன்னிலைப்பெயர் ஆ-௧

பாங்கியின்பெயர் - ஐயைபொய்தவிகுளையாய்ந், தோழிசேடி யிணங்கிபாங்கி. ஆ-௭

தோழிமுன்னிலையின்பெயர் - ஏலாவுமேடியுந் தோழிமுன்னிலைப்பெயர். ஆ-௨

காதலனென்னும்பெயர் - கணவனுந்தோழனும் புதல்வனுங்காதலன். ஆ-௨

காதலியென்னும்பெயர் - மனைவியுந்தோழியும் புதல்வியுங்காதலி. ஆ-௨

துணைவனென்னும்பெயர் - தோழனுங்கணவ
னுந் துணைவனென்றாகும் ஆக-௨

படையின்பெயர் - தானைதண்ட மனீகம்வரூதி
னி, தானைபதாதி பதாகினியூகம், வாஹினியதிகம் பாடி.
பகுதி, சேனைநிதானந் திரள்படையென்ப. ஆக-௰௪

கொடிப்படையின்பெயர் - தார்நிரையாகதந்தூ
சிகொடிப்படை. ஆக-௪

கடைக்கூழையின்பெயர் - கூழைகூழ்தல்கடை
க்கூழையாகும். ஆக-௨

படைவகுப்பின்பெயர் - உண்டையுங்கையுமொ
ட்டியூகமும், வந்தவணியும் படைக்கைவகுத்
தனர். ஆக-௫

மானிடர்பொதுப்பெயர் - மக்கண்மண்ணவர்
மனிதர்நரரென், றந்தமாக்கண் மானிடர்பொதுப்
பெயர். ஆக-௫

மக்களான்பொதுப்பெயர் - மாந்தர்மைந்தர்
மக்களான்பொதுப்பெயர். ஆக-௨

மக்கட்பரப்பின்பெயர் - மன்பதைபைஞ்ஞீன்
மக்கட்பரப்பே. ஆக-௨

மக்கட்கூட்டத்தின்பெயர் - ஓரையும்பண்ணையு
மாயமுங்குழுவுங், கூறுபமாதோ மக்கட்கூட்டம். ௪

உடலின்பெயர் - சட்டகமெய்யே தாவரம்பூட்
சி,யங்கங்காயம் புதையுறுப்பியாக்கை, யாதாரந்தேக
முருவம்படிவமென், றறிஞர்நூலோ ருடலின்பெ
யரே. ஆக-௰௩

பிணத்தின்பெயர் - அழனேகுணபங் களேபர
ஞ்சவம், பிணமெனவைத்துப்பேசினர்புலவர். ஆக-௫

உடற்குறையின்பெயர் - யூபங்கவந்த மட்டை
யுடற்குறை. ஆக-௩

பாதத்தின்பெயர் - சரண்பதங்காலடி கழறாள்
பாதம். ஆக-௭

கரட்டின்பெயர் - பரடேகாலடி மிசைத்திரள் கரடே. (௧)

கணைக்காலின்பெயர் - சங்கங்கணைக்கால் (௧)

முழங்காலின்பெயர் - சானுமுழந்தாள். (௧)

தொடைப்பற்றின்பெயர் - வாமமூருக்க வான் றொடைப்பற்றே. ஆ-௩

குறங்கின்பெயர் - ஊருவுங்கவானுஞ் சோகமு ங்குறங்கே. ஆ-௩

அல்குலின்பெயர் - கடிதடநிதம்பம்வடிவகலல் குல். ஆ-௨

இடையின் பெயர் - நுசுப்புமருங்கு நுண்ணி டையாகும் ஆ-௨

மருங்குற்பக்கத்தின்பெயர் - ஒக்கலை மருங்குற் பக்கமாகும் (௧)

வயிற்றின்பெயர் - குக்கிநுந்த முதரஞ் சடர மென், றுந்தமடிவயின்க டொன்றியவயிறே ஆ-௪

ஆண்குறியின்பெயர் - இலிங்கமுங்கோசமு மா ண்குறியாகும் ஆ-௨

பெண்குறியின்பெயர் - யோனியும்பகமும்பெ ண்குறியாகும் ஆ-௨

கொப்பூழின் பெயர்- உந்திபோகி லிலஞ்சியிந லை, வந்தநாபி கொப்பூழாகும் ஆ-௫

மார்பின்பெயர்- அகலமுரம நிறமுர மாகமார் பே ஆ-௫

முலையின்பெயர் - கொங்கைசுவர்க்கங் குயந்த னநகிலந், தங்கியகுருக்கணம் மம்பயோதரம், இங்கி வைமாதர் முலையெனவிளம்புவர் ஆ-௮

முலைக்கண்ணின்பெயர் - சூசுகஞ்சிலி முகமுலை க்கண்சொல்லும் ஆ-௨

தேமலின்பெயர்- சுணங்குதேமல் பொறியுத்

திதிதலை, * நுணங்குதிதனி வசந்திகைதுத்தி சூ-௭
கைத்தலத்தின்பெயர் - அத்தம்பாணி கரந்தோ
ள்கைத்தலம் சூ-௬
அகங்கையின்பெயர் - அங்கை குடங்கை யகங்
கையாகும் சூ-௨
விரலின்பெயர் - அங்குலிவிரலாம் (௧)
நகத்தின்பெயர் - உகிர்நகமாகும் (௧)
தோளின்பெயர் - புயமுமொய்ப்பும் வாகுவுந்
தோளே சூ-௫
முதுகின்பெயர்-வெரிநும்வெந்நும் புறமுமு
துகே சூ-௫
தோண்மேலின்பெயர் - சுவலுஞ்செகிலு நிகல
முந்தோண்மேல் சூ-௫
கழுத்தின்பெயர் - கண்டமுங் கிரீவமுங் களனு
மிடருங், கந்தரமைந்துங் கழுத்தெனக்கழறுவர் ௬
பிடரின்பெயர் - கயிலேசிறுபுறமெருத்தஞ்சுவ
ல்பிடர் சூ-௪
பிறகின்பெயர் - பிறமும் பிறக்குமபரமும்பிற
கே சூ-௫
முகத்தின்பெயர் - வதநமாநநம் வத்திர முக
மே சூ-௫
உதட்டின்பெயர் - அதரம்பாலிகையிதழேயோ
ட்ட,முத்தமுதடென மொழிந்தனர்புலவர் சூ-௬
பல்லின் பெயர் - தந்தமுமெயிறுந் தட்டமும்
பல்லாம் சூ-௫
மற்றுமெயிற்றின்பெயர் - மிறுவனுநகையுமூர
லுமெயிறும் சூ-௫

---

*நுணங்கு-எ-து, தொடைச்சுவைப்பயன்கருதி
ய அடைமொழியென்றறியாதுசிலர்மயங்கிப்பரியாய
மெனக்கொண்டனர் - மற்றுமவ ிவ்வாறுகொள்வன
விலவறிக.

நகுதலின்பெயர் - நகுதற்குமலையேநாமமாகும். ஆ-௩

அண்ணத்தின்பெயர் - அணரியண்ணம் ௧

கீழ்வாய்ப்புறத்தின்பெயர் - அணல்கீழ்வாய்ப்புறம். ௧

உண்ணாவின்பெயர் - அண்ணமுண்ணா வாகுமுரித்தே. ௧

நாவின்பெயர் - நாலந்நாவு நாவெனச்சாற்றுவர். ஆ-௨

மூக்கின்பெயர் - துண்டமுநாசியு கிராணமுமூக்கே. ஆ-௩

கதுப்பின்பெயர் - கபோலங்கவுளனு கொடிறு கதுப்பே. ஆ-௪

கண்ணின்பெயர் - நாட்டநயன நேத்திரம்விலோசன, நோக்கந்தாரை யம்பகம்பார்வை, யக்கம் விழிகோ கண்ணாகும்மே ஆ-௰௧

நெற்றியின்பெயர் - மத்தகமிலாடமுண்டகநுதல்குள, நெற்றிபால மெனநிகழ்த்தினரே. ஆ-௬

புருவத்தின்பெயர் - புரூரம்பிருகுடி நுதலேபுருவம். ஆ-௩

காதின்பெயர் - கன்னமுஞ்செவியுங் காதின்பெயரே. ஆ-௨

தலையின்பெயர் - சிரமேசென்னியுச்சிமுடிநவிரங், கம்மேயுவ்வி சேகரந்தலையாம். ஆ-௮

ஆண்மயிரின்பெயர் - குஞ்சிநவிருளை குடுமி தொங்கல், பங்கிபித்தை யோரிசிகையென், றிங்கிவை யெல்லா மாண்மயிரென்ப. ஆ-௯

பெண்மயிரின்பெயர் - கோதைநெடுமை கூந்தலைப் பா, லோதிகூழை யரிசாரங்கதுப்புக், கேசமளகங் குழல்குரல்சுரியல், பேசின்மராட்டம் பெண்மயிரென்ப. ஆ-௰௪

மைந்தர்மயிரின்பெயர் - கதுப்பேகேசஞ் சரி
யன்மைந்தர்,மயிர்க்குமொருவழி வருதற்குமுரிய ௩

பிறமயிரின்பெயர் - ஓரிபங்கியுளையேயுரோமமங்,
கேசமராட்டம் பிறமயிராகும் ஆ-௬

மயிர்ப்பரப்பின்பெயர் - சிரோந்தமுரோமஞ்
செறியயிர்ப்பரப்பே ஆ-௨

மயிர்க்குழற்சியின்பெயர்- கொந்தளமளகம் வி
லோதமயிர்க்குழற்சி ஆ-௩

மயிர்முடியின்பெயர் - பின்னகம்பந்த முடிமு
ச்சிகொண்டை, மன்னுசிகழிகை குழல்சுடிகைமௌ
லி, யின்னவைமயிர்முடி யாகுமென்ப ஆ-௯

சடையின்பெயர் - பின்னல்சடிலங் கோடீரம்
வேணி,மன்னுமயிர்ச்சடையெனவகுத்தனரோ ஆ-௪

உறுப்பின்பெயர் - அவயவங்காத்திர மங்கமு
றுப்பே, சினையென் றுரைத்தலு மொருவழிச்சிவ
ணும் ஆ-௪

சந்தின்பெயர் - கந்துங்கொளுத்துங் கழுத்து
ஞ்சந்தாம் ஆ-௩

இறையின்பெயர் - மெய்த்தகுமிறையே பிறங்
கெனப்படுமே ௧

உடற்றழும்பின்பெயர்- செதுகையங்கிதஞ் செ
றியுடற்றழும்பே ஆ-௨

கழலையின்பெயர்- அரலைகழலை யாகுமென்ப ௧

நரம்பின்பெயர் - நாடியுஞ்சிரையு நரம்பி
னாமம் ஆ-௨

எலும்பின்பெயர் - என்பத்தியங்க மெலும்பா
கும்மே ஆ-௩

தலையோட்டின்பெயர் - வெண்டலை யோடே
கபாலமாகும் ௧

கழியுடன்முழுவெலும்பின்பெயர் - கழியுடன்
முழுவென்பு கங்காளமாகும் ௧

குடுமியின்பெயர் - சிமையஞ்சிகை சிமிலிசி
க்கங்குடுமி ஆ ௪

உச்சியின்பெயர் - நவிரஞ்சுடிகை சூழிபுச்சநா
மம் ஆ ௩

இந்திரியத்தின்பெயர் - கரணம்பொறிவாயில்
கந்தமிந்திரியம் ஆ ௪

சுவையொளியூறோசை நாற்றமறியுங், கருவிநா
க்கண் மெய்செவிமூக்கே ஆ ௫

சீவன்பெயர் - சீவனுயிராதன் சேதனன்புற்கல
ன், அணுப்பசுவிய மானனான்மா ஆ ௮

கற்றநாவினன் கேட்டசெவியினன், முற்றவுண
ர்ந்த மூதறிவாளன், நகரிகநாட்டத் தாரியனருவந்தை
த், தெருக்காட்சிச் சேந்தன்றிவாகரத், திரண்டாவது
மக்கட்பெயர்த்தொகுதி,

முற்றிற்று.

* 

மூன்றாவது,

# விலங்கின் பெயர்த் தொகுதி

மூலபாடம்.

---

சிங்கத்தின்பெயர் - ஆளிமடங்க லரிகண்டீரவங்
கேசரிமிருக பதிவயப்போத்துச், சீயம்வயப்புலிபஞ்
சாநநம்வயமா, மேவியசிங்க மெனவிளம்பினரே ௰௧

புலியின்பெயர் - கொடுவரியுழுவை குயவரி
வேங்கை, வல்லியம்வயமா சார்த்தூலம்வியாக்கிரம்,
புல்லுப்புண்டரீகம் வயவரியென்றிவை, பல்பொறிப்
புலியின் பெயரெனப்பகர்வர் ஆ-௰௧

யானையாளிப்பெயர் - அறுகுபூட்கை யாளியெ
னவே, பெறுமேயானை யாளிப்பெயரே ஆ-௩

யானையின்பெயர் - தும்பிகடிவை புகர்முகந்
தோல்கரி, யும்பல்வயமா பகடுநால்வாய், கரிணிகு

ஞ்சரங் கயமேகள்ப, மருண்மாதந்தி மாதங்கமொரு த்தல், களிறுசிந்துரங் கறையடியெறும்பி, வழுவை வாரணம் வேழம்வல்விலங்கு,நாகமதகய மத்தியிபங் கும்பி, போதகமுவாவே தூங்கன்மாதிர, மறமலிகை ம்மா வாம்பல்கோட்டுமா, பிறவும்பிறைக்கையோடி யானைப்பெயரே சூ-௩௪

களிற்றியானையின்பெயர் - மதகரிதந்திவன் களி ற்றியானை சூ-௨

பெண்யானையின்பெயர்-கரேணுபிடிபெண்யானை ப்பெயரே சூ-௨

யானைக்கன்றின்பெயர் - போதகந்துடியடி கய முனிகன்றாம் சூ-௩

பிறந்தநிலப்பெயலாயடுத்து யானைபெறும்பெ யராவன - கிரிசரம்வநசரநதிசரமடுத்துப், பெறுமே யானை பிறந்தநிலப்பெயர் சூ-௩

குதிரையின்பெயர் - துரகதந்துரங்கம் வாசியா ய்மா, குரகதங்கிள்ளை கந்தரு வங்கற்கி, மண்டிலந் துரக மாவேயிவுளி, யொண்டிறலுன்னி யுத்தரிகோ ணங், குந்தங்கொய்யுளை கொக்குப்பரியயம், அச்சு வம்வயமா புரவியரியோ, டித்திறமத்திரி குதிரையி னியற்பெயர் சூ-௨௫

கநவட்டம்பாடலங் கோரங்கந்துக, மெனவும் பண்படுத் தெண்ணவும்படுமே சூ-௬

அப்பெயர்களுள்பாண்டியன்குதிரைப்பெயர் - அவற்றுள், கநவட்டமென்பது வழுதியூர்மா (௧)

சேரன்குதிரைப்பெயர் - பாடலமென்பது சே ரனூர்மா (௧)

சோழன் குதிரைப்பெயர் - கோரமென்பது சோழனூர்மா (௧)

குறுநிலமன்னர் குதிரையின் பெயர் - கந்துகங் குறுநிலமன்னரூர்மா (௧)

குதிரைக் குளம்பின்பெயர் - குரமே யவற்றின் குளம்பாகும்மே (௧)

குதிரைமார்க்கத்தின் பெயர் - மாதிகமவற்றின் மார்க்கமாகும் (௧)

பசுவின்பொதுப்பெயர் - ஆவும்பெற்றமும்பசுவுமானுங், கோவுங் குடஞ்சுட்டுஞ் சாதிப் பொதுப் பெயர் ஆ-௫

பெண்பசுவின்பெயர் - சுரபிதேநுசுரை கபிலை சேதா, குரமேகோமளம் பெண்பான்மென ஆ-௭

ஆண்பசுவின்பெயர் - பாறல்புல்லம்பாண்டில் பசுமூரி, யேறுபூணியிருலைபெற்ற, மெருது சேவிடை யிடபமென்றிவை, கருதிற்போத்தின் பெயரெனக்கருதுவர் ஆ-௰௩

எருமையெனும் பெயர் - எருமைச்சாதி யிருபாற்குமுரித்தே

எருமைப் பொதுப்பெயர் - மேதிகாரான்மகிடங்கவரியென், றோதியநான்கு * மெருமைப் பெயரே ஆ-௪

எருமையாணின் பெயர் - பகடுங்கடாவு மவற்றின்போத்தாம் ஆ-௨

மலட்டெருமையின்பெயர்-மைம்மை யென்பது மலட்டின்கிளவி (௧)

காட்டாவின்பெயர் - ஆமாகவயங் காட்டாவாகும் ஆ-௨

ஆட்டின் பொதுப்பெயர் - மறியுதண் மொத்தைமேழகம்வருடை, கொறியோதகர் கடாக்கொச்சை

---

*முன்சூத்திரத்தில் எருமையென்பதிருபாற்குமுரித்தென்றமையால் இச்சூத்திரத்தில் எருமையென்பதிருபாற்பொதுவாயிற்று.

மேடம், துருவைசெம்மறி பள்ளைவெள்ளை, புருவை
வற்காலிமை யாடெனப்புகல்வர் சூ-௰௭

துருவாட்டின்பெய்ர் - துருவைகொறிமை து
ருவாடாகும் சூ-௩

வெள்ளாட்டின்பெயர்—வெள்ளைகாலிமை கொ
ச்சைவெள்ளாடே. சூ-௪

துருவாட்டேற்றின்பெயர்—ஏழகந்தகரே மே
ழகங்கடாவென, வாகுத்துருவாட் டேற்றின் பெய
ரே. சூ-௪

வெள்ளாட்டேற்றின்பெய்ர்—உதளே செச்சை
மோத்தைவெள்ளாட்டி, னிகரிலேறென நிகழ்த்தவும்
படுமே. சூ-௩

துருவாடாது — துருவைசெம்மறி யாடெனச்
சொல்வர். சூ-௨

ஆட்டுக்குட்டியின்பெயர் — குட்டன் சோரன்
மணங்குமறியறழ், குட்டிப்பெயரெனக் கூறினர் புல
வர். சூ-௫

வரையாட்டின்பெயர் — வருடைசரபம் வரை
யாடாகும். சூ-௨

கவரிமாவின்பெயர்—மாநமாபட்ட மெகினம
ன்னம், ஊனமில்கவரி மாவெனவுரைப்பர். சூ-௪

கழுதையின்பெயர் — கத்தபங்கோகு வேசரிக
ழுதை, யத்திரிகரம்வா லேபமுமாகும். சூ-௬

பன்றியின்பெயர்—இருளிகணலி யேனஞ்சூகர
ம், கருமாமோழல் வல்லுளிகேழல், வன்றிறல்வராக
மெறுழிகோலம், ஒன்றியகளிறிவை பன்றியாகும்.
சூ-௰௨

மருட்டுப்பன்றியின்பெயர்—இருட்டிபோத்து
க்கோலங்கிரிகிரி, மருட்டுப்பன்றிக்கு மாட்சிப் பெய
ரே. சூ-௫

முட்பன்றியின்பெயர்—எய்யே முண்மா சல்லி யமுட்பன்றி. ஆ-௩

மானின்பெயர் - சாரங்கநவ்வி மறிபிணையரிணை முழையெனச்சொல்லியவாறுமானின்பெயர். ஆ-௬

மானேற்றின்பெயர் — இரலையுங்கலையு மவற்றி னேறும். ஆ-உ

புல்வாயின்பெயர்—இரலைபுல்வா யாகலுமுரித்தே. ௧

பூனையின்பெயர் — விலாளம்பவனம் வெருகு விடருகப், பூசையாக்கன் மார்ச்சால்பூனை. ஆ-எ

ஆண்பூனையின்பெயர் — விலாளமுங் கடுவனும் வெருகுமாண்பெயர். ஆ-௩

காடியின்பெயர்—உளியமெண்கு பல்லங்காடி, குடாவடியென்றுங் கூறவும்படுமே. ஆ-௪

நரியின்பெயர்-இகலன்சம்புகோமாயுநரியே.௩

ஓரியின்பெயர்—இகலனோரி யென்றுமாகும். ௧

கீரியின்பெயர்—நகுலங்காத்திரந் தீர்வைகீரி. ௩

முயலின்பெயர்—சசமுயலென்று சாற்றப்படுமே. ௧

கத்தூரியின்பெயர்—மறுவிநாவி மான்மதந்துருக்க, நரந்தநான மறிகத்தூரி. ஆ-எ

குரங்கின்பெயர் — அரியேகோகிலங் கடுவன் கோடரங், கவியேயூக மந்திமர்க்கட, நிரந்தரம்வாநர, மென்றிவைபத்துங், குரங்கின் பெயரெனக் கூறல் வேண்டும். ஆ-௰

பெண்குரங்கின்பெயர் — மந்தியூக, மற்றதன் பெண்பெயர். ஆ-உ

கருங்குரங்கின்பெயர் - காருகம்யூகங் கருங்குரங்காகும். ஆ-உ

முசுவின்பெயர் - ஓரியுங்கலையுங் கடுவனுமுசுவே. ஆ-௪

நாயின்பெயர் - ஏகினன்சூரன் ஞமலிசுணங்க ன், ஞமலிருக்கன் ஞாளிசுவாநாய். ஆ-அ

பெண்ணாயின்பெயர் - ஞமலிபெண்ணா யாக வுமுரித்தே. (க)

உடும்பின்பெயர் - உடும்பேருசலிகை கோதா வாகும். ஆ-உ

அணிலின்பெயர் - வெளிலேயணிலா மென வி ளம்பினரே. (க)

ஓந்தியின்பெயர் - எழிரண்டுகோம்பி ரயோந்தி யென்றிசைப்பர். ஆ-ரு

பச்சோந்தியின்பெயர் - பச்சோந்திகாமரூபப் பெயரே. (க)

மூஞ்சூறின்பெயர் - சுண்டன்சூரன் சுசுந்தரி மூஞ்சூறு. ஆ-ரு

எலியின்பெயர் - சிகரியெலியிரும்பன், (க)

காரெலியின்பெயர் - கருப்பைகாரெலி. (க)

பெருச்சாளியின்பெயர் - ஆகுநாடியு மாம்பெ ருச்சாளி. ஆ-உ

ஒருசார்விலங்கேற்றின்பெயர்- களிறுமாவுமொ ருத்தலும்மேறும், போத்தும்பகடுங் கலையுமும்பலுங், கடுவனுஞ்சேவலுந் தகருமேட்டையு, மொருசார்வி லங்கினேற்றிற்குரிய. ஆ-யஉ

மேற்சொல்லியவற்றுள் களிறெனும்பெயர்- அ வற்றுள்,வேழமுங்கேழலும் விதந்துகளிறென்ப.

மாவெனும்பெயர் - குதிரையும்யானையும் ப ன்றியு மாவே.

ஒருத்தலெனும்பெயர் - புலியுழைபுல்வாய் ம ரையேயெருமை, கவரியானை பன்றிகரடி, யுரியவாகு மொருத்தற்பெயர்க்கொடை.

ஏறெனும்பெயர் - கவரிபன்றி மரையுழைபுல் வா, யெருமையெற்றட் சுறவேறெனப்படுமே.

போத்தெனும்பெயர்- புலியேமரையேபுல்வாய்பெற்றமெருமையென்றிவைற்றேற்றைப்போத்தே

போத்தெனும்பெயர் - பூனையுநீர்வாழ்சாதியும்போத்தே.

போத்தெனும்பெயர் - குதிரையானும் போத்தெனப்படுமே.

பகடெனும்பெயர்- யானைபெற்றமெருமையேற்றைத், தானேபகட்டென் றுரைக்கத்தகுமே.

கலையெனும்பெயர் - மானேமுகவேகலையொடு வருமே.

உம்பலெனும்பெயர் - யானையும்யாட்டினேற்றையுமும்பல்.

கடுவனெனும்பெயர் - குரங்கும்வெருகுங்கடுவனென்ப.

சேவலெனும்பெயர் - கோழியுமன்னமுஞ் சேவலாகும்.

தகரெனும்பெயர் - சுறவுங்களிறுந் துருவாட்டேற்றைத்,தகரெனுநாமந்தக்கதென்ப.

எட்டையெனும்பெயர் - எருமைப்பகடும் வெருகினேற்றையும், வருபவேட்டையெனவகுத்தனரே.

சேவெனும்பெயர் - எருமைபுல்வா யேற்றைச் சேவும்.

ஏறெனும்பெயர் - துருவாடேறும்

போத்தெனும்பெயர் - வெருகுபோத்து மொருசார் விலங்கினேற்றிற்குரிய.

ஒருசார்விலங்கின்பெண்பெயர் - பெட்டையும் பிணையும் பிணவுமானு, நாகுமூடுங் கடமையும்பாட்டியு, மந்தியுமொருசார் விலங்கின்பெண்பெயர் ௯

பெட்டையெனும்பெயர் - அவற்றுள் ஒட்டகங் குதிரை கழுதைமரையிவை, பெட்டையென்னும் பெயர்க்கொடைபெறுமே.

பிணையெனும்பெயர் - புலியுழைபுல்வாய் கவரி யென்றிவை, பிணையெனும்பெயரிற் பேசப்படுமே.

பிணவெனும்பெயர் - பன்றிபுல்வாய் நாயென மூன்றும், பின்றுக்காட்சிப் பிணவொடுவருமே.

ஆவெனும்பெயர் - எருமையும்பகவு மரையு மென்ன, வருபவைமூன்று மாவெனப்படுமே

நாகெனும்பெயர் - மரையும்பெற்றமு மெரு மையுநாகே

நாகெனும்பெயர் - நீர்வாழ்சாதி யுணர்ந்துநா கே.

மூடு-கடமை-என்னும்பெயர் - மூடுங்கடமையு மாடல்பெறு

பாட்டியெனும்பெயர்-பாட்டியென்ப பன்றியு நாயும்.

மந்தியெனும்பெயர் - குரங்குமுசுவு முசுவுமெ ன்றிவை, வருங்காற்பெண்பெயர் மந்தியென்றாகும்.

பிணையெனும்பெயர்-ஆனைகுதிரை யொட்டகங் கழுதை, யானபிணையென் றறைதற்குரிய.

பாட்டியெனும்பெயர் - நரியிற்பாட்டி நடை. பெற்றியது, மொருசார் விலங்கின் பெண்பெயர்க் குரைப்பர்

பெண்ணெனும்பெயர் - பெண்பாலெவையும் பெண்ணெனப்படுமே

பெண்ணெனும்பெயர் - பெண்பாலெவையும் பிணவென்பவொருசார்

ஆணெனும்பெயர் - ஆண்பாலெவையு மாணெ னப்படுமே

போதகமெனும்பெயர்-1அரிமாயானை புலியே யனைய, விளையவேற்றைப் போதகமென்ப.

விலங்கின்பிள்ளைப்பெறும்பெயர் - குருளையுங் குட்டியும் பறழும்பார்ப்பும், பிள்ளையுமறியுங் கன்

றுங்குழவியும், பெறுமேவிலங்கின் பிள்ளைப்பெயரே.

குருளை-பறழ்-என்னும்பெயர் - அவற்றுள், புலியேயன்றி முயலும்நரியே, குருளைபறழெனக்கூறினர்புலவர்

பிள்ளையென்னும்பெயர் - பிள்ளைப்பெயரோ நாயன்றிப்பெறுமே

மறியெனும்பெயர் - ஆடுமான்குதிரை யழுங்குமறியென்ப.

குரங்குமுதலியகோடுவாழ்விலங்கிற்குரியபெயர் - குழவியுமகவுங் குட்டியும்பிள்ளையும், பறழும்பார்ப்பும்பகரப்படுமே, குரங்குமுதலாயின கோடுவாழ்விலங்கே.

கன்றெனும்பெயர் - கடமையும்யானையுங் குதிரையுங்கழுதையு, மரையுமெருமையு மானுமொட்டகமுங், கவரியுங்கராமுங் கன்றெனப்படுமே.

குழவியெனும்பெயர் - யானையுங்கடமையுமெருமையுமரையு, மானுங்குழவிப் பெயரோடடையும்

பறழ்-குட்டி- எனும்பெயர் - வெருகேழுங்காவணிலெனமூன்றும், பறழேகுட்டிப் பாலவாகும்.

குருளை-கன்று-எனும்பெயர் - குருளையுங் கன்று மானிற்கொளலும்.

குழவி-குருளை-எனும்பெயர் - குழவியுங் குருளையுமுசுவிற்பெறலும், ஒருசார்விலங்கின் பிள்ளைப்பெயரே.

பிள்ளை-பார்ப்பு-எனும்பெயர் - பிள்ளையும்பார்ப்புந்தவழ்சாதிபெறுமே.

எற்றை-குருளை- எனும்பெயர் - நந்தினேற்றையும் அரவிற்குருளையும் வந்துழியொருசார் வழங்குதற்குரிய. ௬௬

விலங்கின்பொதுப்பெயர் - மாவுமானும் விலங்கின்பொதுப்பெயர்.

காலியினம்-அல்லது- பசுக்கூட்டத்தின்பெயர்-
காலியினநிரைதொறுவுமாகும். ஆடூ உ

விலங்கின் கூட்டத்தின்பெயர் - கணமுஞ்சால
மு வியூகமுங்குலமும், விருந்தமுங்கூட்ட மெனப்
பெயர்பெறுமே,வந்துழிபெறுதற் குரியவென்ப. ௫

வாலுறுப்பின்பெயர் -வாலதிதோகை கூலமிலா
ங்கூலம்,வாலுறுப்பாக மதித்தனர்புலவர். ஆடூ ௪

வாற்கீழிடத்தின்பெயர் - வெருகமென்பது வா
ற்கீழிடமாம். (க)

யானைச்செவியின்பெயர் - யானைச்செவியே க
ன்னதாலம். (க)

யானைமுதுகின்பெயர் - மஞ்சுமுதுகென வகு
த்தனர் புலவர். (க)

யானைவாலின்பெயர் - வாறுலவட்ட மாகுமெ
ன்ப. (க)

யானைமதத்தின்பெயர் - கடமுந்தானமு மதமா
குமே ஆடூ உ

மதம்பாய் கவுட்சுவட்டின்பெயர் - கரடமதம்
பாய் கவுட்சுவடாகும் (க)

மும்மதமாவன - கன்னமதங் கோசமதங் கைம்
மதமூவகையே ஆடூ ௩

தாளின்பெயர்-காத்திரமங்கிதந் தாளாகும்மே ஆடூ உ

குதிரைவாயினும் யானைக்கையினு முமிழ்நீரின்
பெயர் - இவுளிவாயினும் யானைக்கையினு,முமிழ்நீர்
விலாழியென்றுரைக்கத்தகுமே (க)

எருத்தின் முரிப்பின்பெயர் - இமிலேயேற்றின்
றிரண்முரிப்பாகும் (க)

முலைமேற்றிரள் சுரப்பு வடிவின்பெயர் - செரு
த்தன்முலைமேற்றிரள்சுரப்புவடிவே (க)

முலையின்பெயர் - சுரையென்பெயரோமுலையிற்
காகும். (க)

மதர்வென்னும்பெயர்-மதர்வென்கிளவிமகிழ்வு மிகுதியும் ஆக-௨

மதலையென்னும்பெயர்- மதலைக்கிளவி தூணே மரக்கலம், புதல்வன்பெயர்- கொடுங்கைபாவைபோல்வன, தகவிற்றுகுஞ் சார்பெனவையும். ஆக ௫

மலர்தலென்னும்பெயர்- மலர்தறோன்றலுமெதிர்தலும்விரிதலும். ஆக ௩

மலைதலென்னும்பெயர்-மலைதல்பொருதலுமலர் சூடுதலும் ஆக ௨

மறலியென்னும்பெயர்—மறலிகூற்றுமயக்கமு மாகும் ஆக ௨

மறையென்னும்பெயர்-மறையேவேதமுமறைத்துமொழிகிளவியும் ஆக ௨

மற்றென்னும்பெயர்-மற்றென்கிளவிவினைமாற் றசைநிலை ஆக ௨

மனவென்னும்பெயர் - மனவேயக்குமணி சங்குமணிப்பொது ஆக ௩

மாவென்னும்பெயர் - மாவேபெருமையுங்கருமையுங்குதிரை, பெரியநாற்காலுடைவிலங்கும் வண்டும் பூவுறைதிருமெனவாறையும்பொருந்தும் ஆக ௬

மாதரென்னும் பெயர் - மாதர்காதலு மளிருமாகும் ஆக ௨

மாறுதலென்னும்பெயர் - மாறுதலொப்புமயக்கமுமாகும் ஆக ௨

முடலையென்னும்பெயர்-முடலைதிரட்சியு முருகுமாகும் ஆக ௨

முரணென்னும்பெயர்-முரணேவலியும் பகையுமாகும் ஆக ௨

முற்றென்னும்பெயர்- முற்றேமுழுவது [illegible] தலுமொழியும்

முனையென்னும்பெயர்-முனையேயிறையும்பகை யுமாகும் ஆ-௨

முரலென்னும்பெயர் - முரணகை யெயிறுஞ் சோறுமாகும் ஆ-௩

மூரியென்னும்பெயர் -மூரிபெருமையுமானே றுமாகும் ஆ-௨

மூலமென்னும் பெயர் - மூலமோர் நாளுவே ருமுதலும் ஆ-௩

மெய்யென்னும்பெயர்-மெய்யேயுடம்புமுண் மையுமெய்யெழுத்தும் ஆ-௩

வசியென்னும்பெயர் - வசியேவசியமும் வாளு ங்கூர்மையும் ஆ-௩

வடிவென்னும் பெயர் - வடிவேமேனியு முரு வுமல்குலும் ஆ-௩

வண்ணமென்னும்பெயர் - வண்ணமோசையும் வடிவுமாகும் ஆ-௨

வதுவையென்னும் பெயர் - வதுவைமன்றலு மணமுமாகும் ஆ-௨

வதமென்னும் பெயர் - வதமேகாடி நீருமழு கும் ஆ-௩

வயாவென்னும்பெயர் -வயாவேவேட்கைப்பெ ருக்கமும்வருத்தமும் ஆ-௨

வரியென்னும்பெயர் - வரியேபாடலுமெழுத் தும்வண்டும். ஆ-௩

வரைதலென்னும் பெயர் - வரைதல் நீக்கலுங் கொள்ளலுமாகும் ஆ-௨

வலனென்னும்பெயர் - வலனேவெற்றியும் வல முமேலிடமும் ஆ-௩

வல்லையென்னும்பெயர் — வல்லைவிரைவு மதிலு மாகும். ஆ-௨

வழங்கலென்னும்பெயர் - வழங்கல்கொடைசேறல் சொல்லும்வரையார். ஆ-௩

வழியென்னும்பெயர் — வழியேயிடனும் பின்னும்வரையார். ஆ-௨

வள்ளென்னும்பெயர் — வள்ளேகூர்மையும் வாரும்வலியும் ஆ-௩

வறிதென்னும்பெயர் — வறிதுசிறிதாகு மருகலுமுரித்தே. ஆ-௨

வாயிலென்னும்பெயர் — வாயில்பொறியும் வயிலுந்தாறும். ஆ-௩

வாயென்னும்பெயர் — வாயேயிடனுமெய்யும் வாக்கும். ஆ-௩

வாரமென்னும்பெயர் — வாரக்கிளவியேழ் கிழமையுமலைச்சார்பும். ஆ-௨

வாழியென்னும்பெயர் — வாழியிடைச்சொல்லும் வாழ்கவெனுஞ்சொல்லும். ஆ-௨

வாளென்னும்பெயர் — வாளேயொளியும் வாட்படையுமாகும். ஆ-௨

விடங்கமென்னும்பெயர் - விடங்கழகும் மழுகுமாகும். ஆ-௨

விண்டென்னும்பெயர் - விண்டுமாயோனும் வெற்பும்வேயும். ஆ-௩

விம்மலென்னும்பெயர் - விம்மலொலித்தலும் விம்முதலுமாகும். ஆ-௨

விளையென்னும்பெயர் - விளையெங்கிளவி சார்ந்தும்விளையும். ஆ-௨

வில்லென்னும்பெயர் - வில்லேயொளியும் விற்படையுமூலமும். ஆ-௩

விளக்கென்னும்பெயர் - விளக்கேயொளியும் விளக்குமாகும். ஆ-௨

விறப்பென்றும்பெயர் - விறப்பே செறிவும் வெருவலும் பெருக்கமும். ஆ-௩

வீசுதலென்றும்பெயர் - வீசுதல் கொடுத்தலு மெறிதலுமாகும். ஆ-௨

வெடியென்றும்பெயர் - வெடியே வெள்ளிடை வெருவுமாகும். ஆ-௨

வெம்மையென்றும்பெயர் - வெம்மை வேட்கை விரைவெனவிளம்புவர். ஆ-௨

வெறியென்றும்பெயர் - வெறியே நாற்றம் வெறியோடணங்காட்டு. ஆ-௩

வெறுக்கையென்றும்பெயர் - வெறுக்கை செல்வமும் விழுப்பொருளுமாகும். ஆ-௨

வேயென்றும்பெயர் - வேயே மூங்கிலு மொற்றுமாகும். ஆ-௨

வேலனென்றும்பெயர் - வேலன் முருகன் வெறியாட்டாளன். ஆ-௨

வேலியென்றும்பெயர் - வேலி மதிலுங் காவலுமாகும். ஆ-௨

வேலையென்றும்பெயர் - வேலை தானே கடலுங் கடற்கரையுங், காலமுங் கூறுங் கருவியதாகும். ௫

வேளாண்மையென்றும்பெயர் - வேளாண்மை யுபகார மீகையும் விளம்பும். ஆ-௨



ஆதியிற்பொருள் முற்றிற்று

கூளியென்னும்பெயர்-நட்புத்தொகுதி பேயெ
னுமென்றும், வைத்தனர்கூளி யாகவருத்தே. சூ ௫

கைக்கிளையென்னும்பெயர்- ஒருதலைக்காமமும்
யாழிலோர்நரம்புந், தெரியிற்கைக்கிளையெனப்பெய
ர்சிவணும் சூ ௨

கோன்னென்னும் பெயர் - அச்சம்பயனிலா
லம்பெருமையோ, டப்பெயர்நான்குங் கோன்னெ
னவறைவர். சூ ௬

கோவென்னும்பெயர் - அந்தரங்குலிசம் பசி
னொடத்திரம்,வந்தநீர்திசைமலைவெய்யனவன், வி
ழிபசுகோவன வேண்டினர்புலவர். சூ ௰௧

கோதையென்னும் பெயர் - பூட்டுவனமாலையு
மாலைபுனைமாதருந், தொற்புனைவிற்றுடைகொள்வா
க்கட்டியுங், கோச்சேரன்பெயர் மயிர்காற்றுங் கோ
தை சூ ௬

கோலென்னும்பெயர் -நிறையறிதுலாமுமுத
நமொழுகுகருவியு,மிறைவன்முறைநடாத்தலும் யாழ
நரம்புமம்புங், குதிரைமத்திகையுங்கோலெனு முரும்

கோளென்னும்பெயர் - அலர்கதிர்முதலாமமர
ருநாளுங், கொலையுமிடையூறுங் கோளென்றுரும் சூ

சாமமென்னும்பெயர் -யாமமோர்வேதமுமா
யுஞ்சாமம் சூ ௫

சாறென்னும் பெயர் - விழவுங்கள்ளுஞ் சாறெ
னவிளம்புவர் சூ ௨

சிக்கமென்னும்பெயர் - உச்சியுமயிர்வார் சிப்பு
முறியுஞ்,சிக்கமென்னும்பெயரொடுசிவணும் சூ ௫

சித்திரமென்னும் பெயர் - மெய்யே போலப்
பொய்யையுரைத்தலுஞ், செய்கோல்வடிவு மமுஞ்
சித்திரம். சூ ௫

சிலையென்னும்பெயர் — வில்லையுமலையையுஞ்சி
லையெனவிளம்புவர். சூ ௫

சீரொன் றும்பெயர் — பல்வகையியங்க ளோசை
பார,மொலி லுதல்காற்றன்னடை யொண்புகழுமுரு,செ
ல்வஞ்சீர்மை சீரென்றாகும். ஆ_ ௭

சுடரொன் றும்பெயர் — மதியுஞா யிறுங் கனலியு
மற்றைப்-பொருவுறுமொளியுஞ் சுடரென்றாகும். ௪

செச்சையென் றும்பெயர் — வெட்சியும்வெள்
ளாட்டேறுஞ்செச்சை. ஆ_ ௨

செய்யலென் றும்பெயர் · இறைவன்பழைப்பூ
வீரர்புத்திர, ரறையிற்செம்மையோ டைந்துஞ்செ
ம்மல். ஆ_ ௫

சேயென் றும்பெயர் — செவ்வாய்முருக னிளை
மைபுத்திர,ரிவ்வாறெல்லாஞ் சேயெனவிசைப்பர். ௪

ஞெள்ளலென் றும்பெயர்-சோர்வுங்குதலுடன்
படல்பயுகர்நாவிரேறுடொலியுந்தெருவுஞெள்ளல். ௯

தண்டென் றும்பெயர் — தண்டுமென்றுந் தடி
யுந்தண்டாம். ஆ_-௨

தபநனென் றும்பெயர்- அனலுமருக்கனுந்தப
னனென்றாகும். ஆ_-௨

தாறுமென் றும்பெயர்—குற்றியையுந் துணை
யுந் தாறுவென்ப. ஆ_-௨

தாரொன் றும்பெயர் — பூவும்பூமாலையும் போர்
முன்செல்கொடிப்படையு, மாவினுக்கணியுங் கிண்கி
ணிமாலையுந்,தாவில்பெயர்க்கொடை தாரொன்றாகும். ௪

தாவரமென் றும்பெயர் - மரமுமலையும் போல
நிற்பன, தருபெயர்தானே தாவரமாகும்.

தானையென் றும்பெயர்-கைப்படைகாலாட்படை
யேயாடை,தப்பின்றுந்தானையென்றாகும் ௩

திணையென் றும்பெயர் — குலமுமொழுக்கமு
மொழுக்கநிகழ்ந்த, நிலமுந்திணையென நிகழ்த்தினர்
ஒளவி. வ -௩

துஞ்சலென்னும்பெயர் — சாதலுநிலைத்தலு முறங்கலுந் துஞ்சல். சூ-௩

துத்தியென்னும்பெயர் — சுணங்கும்பொறிப்புந் துப்பலுந் துத்தி. சூ-௩

துப்பென்னும்பெயர் — வன்மைபவளம் வலி யோடரக்கென்,றெண்ணியநான்குந் துப்பெனவிசைப்பர். சூ-௪

தூவியென்னும்பெயர் — பசையுந்தசையும்பற வையிறகுந்,தொகுபெயர்தாமேதூவியென்றாகும். ௫

தொடியென்னும்பெயர் — ஒருபலம்வளையே தொடியென்றாகும். சூ-௨

தொய்யிலென்னும்பெயர் — உழவுநிலத்தெ ழுவதோர்புதலுங், குழையுமகிழ்ச்சியு மழகுமென் றிவை, ஐயருங்கூறுந் தொய்யிற்கிளவி.

நகையென்னும்பெயர் — மகிழ்ச்சியின்விளையா ட்டின் வருநகைதானே, மகிழ்ச்சியிடத்து மெய்தற் குரித்தே.

நவமென்னும்பெயர் - ஒன்பதுங்கேண்மையும் புதுமையுநவமே. சூ-௩

நவிரமென்னும்பெயர்- மலையுமுச்சியுமருதயா ழ்த்திறனு,நவிரமென்னும்பெயர்நடைபெற்றியலும். ௩

நாகமென்னும்பெயர் — அரவுங்காரியமுமமரர் நாட்டொருபெயரு,மலையும்யானையுமொருமரப்பெ யருந்,தெரியினாக மெனப்பெயர்சிவணும். சூ-௬

நாகென்னும்பெயர் — ஆவுமெருமை மரையு நந்து,மீனுமிளமையுங் கெழுமையுமிளமரமு,நாகெ னும்பெயரி னடைபெற்றியலும். சூ-௭

நாஞ்சிலென்னும்பெயர்- எயிலுறுப்புமுழுபடை நாஞ்சிலாகும். சூ-௨

நாணென்னும்பெயர் — மாதர்மங்கலமு மணியு மாதமும்,பாசமுநாணெனுஞ்சொல்லிற்பயிலும். ௪

முந்துக்கிழமுப்பற்றியசிதமுப்பனியெனப்படுமே. ௫

பாணியென்னும்பெயர் - நெடித்தற்பொழுதுந் நீளொலியையும், பாடற்பல்வியமும் பாணியென்று ரைப். ஆடூ ௪

பாலையென்னும்பெயர் — நீரின்றிவெளிற் றெறு நிலனுமந்நிலப்,பாடலும்பாடறகளைவயுப்பாலை,பொருள்வயிற்பிரிதலும் புணர்ந்துடன்போகலு மருவிரியைந்திலும் பாலையாகும்.

பாலென்னும்பெயர் — பகுத்தல்பக்கந் திசையியல்பென்ன,வருக்கிநால்ரு பாலாகும். ஆடூ ௪

பாழியென்னும்பெயர் — உவரு வலியு முறையுளுஞ்சயநமும், பாழியென்றுபகரப்படுமே. ஆடூ ௬

புகாவென்னும்பெயர் - உயர்வுந்துரமு முவமைச்சொல்லும், புகாவெனிளவிப் பொருளாபனரும். ஆடூ ௬

புலவனென்னும்பெயர்-அமரருங்கவிஞரு மாந்தருப்பாடிதரும், பொருநருமறிஞருப் புலவனெனப்படுமே. ஆடூ ௭

புனைவென்னும் பெயர்—காப்பாமரமு நாகணைவாய்ப்புன்னைத், புனைவென்னும் பொருளாயடனைரும். ஆடூ ௬

பொதியென்னும்பெயர்— நீயுஞ் சொற்பயனு நிகழ்பலபண்டமும்,பொதியென்கிளவிப் பொருளாபுணரும்.

பொருநனென்னும்பெயர் பொருப்போர்த்தலைவரும் பெருங்கூத்தின்கொடியரும், பொருப்படைவீரரும் பொருநனெனப்படுமே ஆடூ ௬

பொறியென்னும்பெயர் - திருவைப்பொறியுந் திரமிலாஞ்சனைமே, புகழ்ச்சிப்புலவர் பொறியெனப்புகல்வர். ஆடூ ௪

பொறையென்னும்பெயர்- மலைசுமைபாரமம்

பற்சேர்ந்தனே, பலவியபொருண்மை பாராந்துய்ப்பொறையே. ஆ ௫

மடங்கலென்னும்பெயர் - ஊழித்தீச்சிங்க முகமுடிவிடியென, வாழித்தமிழ்ப்புலவர் மடங்கலென்ப, கொடுங்கூற்றின்பெயரு நோயுங்கூறும் ஆ ௬

மடலென்னும்பெயர்- பூவினிதழும் பனையிதழும் போல்பவும்,வாயிற் பலகையின் மடற்கிளவி. ௨

மறுகென்னும்பெயர்- தெருவுந்தேறலு மறுகெனச்செப்பவர். ஆ ௨

மருதமென்னும்பெயர்- பழனநிலனுமந்நிலப் பாடலு மருதமென்னும் பெயராய் வழங்கும். ஆ ௨

மள்ளனென்னும்பெயர் - அருந்திறல்வீரர்களும் பெருந்திறலுழவர்களும், வருந்தலைகத்தாரு மள்ளனென்னும்பெயர். ஆ ௨

மறமென்னும்பெயர் — கொலையுஞ்சேவகமுங் கொடுவினைச்செயலும், வலியுஞ்செற்றலு மறமெனப்படுமே. ஆ ௫

மன்னென்னும்பெயர் — மன்னலுமிடைச்சொல்லு மிறையுமன்னே. ஆ ௩

மாடென்னும்பெயர் - மணியுஞ்செல்வமுநிலையும்பக்கமுந்தரமுமாடென்றுரைக்கத்தகுமே ஆ ௫

மாலையென்னும்பெயர் - பொன்னின்மணியிற் பூவிற்சொல்லின், வின்றுறத்தொடுத்தலு மிரவுமந்தியு மென்னுமியல்புமாலையென்றாகும். ஆ ௪

மாலென்னும்பெயர் - மாயோன்பெயரொடியக் கட்வேட்கை, மேகங்காற்றுப்பெருமைகருநிறஞ், சோழன்புதனெனச்சொற்றிடுமாலே. ஆ ௮

மாழையென்னும்பெயர் - ஆயமடமைபொன் னேலாகக்கட்டி, யோலைபுளிமா மாழையென்றுரைக்கும். ஆ ௬

[illegible]ன்னும்பெயர் — விமலங்குமரவேளுமி

ளமையு, நரையு நாற்றமு மகிழுமெழுச்சியுங், வெறியாட்டாளனு முருகனை விளைப்பர். ஆ ௮

முல்லையென்னும் பெயர் — காடுசார்நிலனுங் கானமல்லிகையு, மோடுடு வெற்றியுங்கற்பு முல்லை. ௪

முளரியென்னும் பெயர் — எரியந்தாமரையு நுட்பமுமுண்மரமு முரியகாடுமென்றைந்து முளரி, ௫

மையென்னும் பெயர் - குற்றமுமாடுங் கருமையுங்கொண்டலு, மற்றிவைமையெனுஞ் சொல்லொடு வருமே. ஆ ௪

வஞ்சியென்னும் பெயர் - மேற்செலவும் பாவிகற்பத்தொருபாவு, மோர்கொடிப்பிறப்ப மதனுவமை மாதரு, மாற்றரும் பெயக்கொடை வஞ்சியென்றாகும்

வம்பென்னும் பெயர் - கச்சுநிலையின்மை புதுமைகந்த, மொத்தநான்கும் வம்பெனவுரைப்பர். ௪

வயிரமென்னும் பெயர் — செற்றமுங்கூர்மையுஞ்சேருமணியும், வச்சிரமும் வன்மையும் வயிரக்கிளவி. ஆ ௯

வயினென்னும் பெயர் — வயிறேயிடமனை மூன்றும் வயினம். ஆ ௩

வளமென்னும் பெயர் - பண்டமும் வளப்பாடும் வளமெனப்படுமே ஆ ௨

வாகையென்னும் பெயர் — ஆள்வினை முதலாஞ் செய்கையு நலனுங், கைவன்முதலாங் கல்வியுமாண்மையஞ், சால்டமுதலாம் பண்புமிகையு, மொழுங்க முதலாந் தவமுமறத்துறையு, மொருவரினொருவா வென்றிமிகுதியும், வருவனவெல்லாம், வாகையெனும் பெயர். ஆ ௰

வாமமென்னும் பெயர் — குறளையழகு குறங்கேயிடப்பா, லிவையொருநான்கும் வாமமென்ப ௪

வாரணமென்னும் பெயர் - யானையுங்கோழியுஞ் சங்கும் வாரணம் ஆ ௩

வாரியென்னும்பெயர் - கடலுநீர்மிகுதியுங்கத வுவ்வாயிலு,மடையுமென்றிவை வாரியென்ப ௫

விதியென்னும்பெயர் - இயல்புஞ் செயலும் விதியென்றாகும் ஆ௨

வியங்கோளென்னும்பெயர் - ஏவலிற்கோளு மேவலும்வியங்கோள். ஆ-௨

விருத்தியென்னும்பெயர் - உரியசொல்லு முரிய பொருளும், விரியவுரைப்பது விருத்தியாகும்.

விழுமமென்னும்பெயர் - சிறப்புச்சீர்மையிடும் பையிம்மூன்றும்,விரிக்கின்மேலோர்விழுமமென்ப ௩

விளரியென்னும்பெயர் - யாழினோர்நரம்புந்திற லில்யாழும், வெட்கமிகுதியு மிளமையும்விளரி. ௪

வெள்ளையென்னும்பெயர் - வெள்ளாடுவெண் பா வெள்ளைவழியின, வெள்ளையென்னும் பெயரின் விளம்புவர். ஆ-௩

வேழமென்னும்பெயர் - யானையுங்கருப்பும் கொறுக்கச்சியுடனும், வேயுங்கூறும்வேழக்கிளவி. ௪

வையென்னும்பெயர் - நெல்லின்றாட்புல்லுங் கூர்மையுஞ்,சொல்லின்மூன்றும் வையென்றாகும். ௩

வைகலென்னும்பெயர் - கழியுநாளும் பலரிக் காலையிற், றழுவுவைகறங்கலுமுரித்தே, ஆ-௩

வையமென்னும்பெயர் - சிவிகையுமாவேறுஞ் சகடமுந்தேரு,மவநியும்வையமெனப்பெயராகும் ௫

புலவிநீக்கியகல்விச்செல்விக், கமிழ்துசுவையீந் தவரும்பெறலின்பத், தொருபெருஞ்செல்வனருவந் தைச்சேந்தன், பகர்வுற்றதிவாகரத்துப் பதினொன்றா வதொரு, சொற்பலபொருட்பெயர்த்தொகுதி.

முற்றிற்று.

இருவகைவினையின் பெயர் - இருவகைவினை பற்றுவினை பொருள்வினை

மும்மையின் பெயர் - மும்மையும்மையு மிம்மையுமறுமையும்

முப்பொறியின் பெயர் - மனமும் வாக்குங் காயமு முப்பொறி

முச்செய்கையின் பெயர் - படைத்தல் காத்தலழித்தன முச்செய்கை

முக்குற்றமென்னும் பெயர் - முக்குற்றங் காமம் வெகுளிமயக்கம்

முக்காலமென்னும் பெயர் - இறந்தகாலமெதிர்காலநிகழ்காலமென, மொழிந்தமூன்றுகாலமாகும்

மூவிடமென்னும் பெயர் - முன்னிலைபடர்க்கை தன்மைமூவிடம்

மூவுலகென்னும் பெயர் - பூமியாகாயஞ் சுவர்க்கமென்ப, தாமொருமூன்றுநிலமென்றுரைத்தவைய

மூவகைமொழியென்னும் பெயர் - பட்டாங்கு பேசல்பழித்தல்புகழ்தலென, முட்டின்று கூறுமூவகை மொழியே

முச்சுடரென்னும் பெயர் — முச்சுடராதித்தன் சந்திரனங்கி

முத்தீயென்னும் பெயர் - அந்தணர் முத்தீ காருகபத்தியந், தென்றிசையங்கி யாகவநீயம்,

முச்சிவணையென்னும் பெயர் - உதரம்விந்துநூ தவணையென, வொருமூன்றுஞ் சிவணையே

முக்குணமென்னும் பெயர் - முக்குணஞ்சாத்துவிகமிராசதந்தாமதம்

சாத்துவிககுணம் - சாத்துவிகஞானந்தவமுண்மைநல்லறு, மார்த்தமோநமோ டைம்புலனடக்கல்

இராசதகுணம்- தானந்தவமே தருமம்பேணல்

சதுரங்கமென்னும்பெயர் - சதுரங்கம்யானை தேர்குதிரைகாலாள்

நாற்கரணமென்னும்பெயர் - மநப்புத்தியாங் காரஞ்சித்தநாற்கரணம்

நாற்கதியென்னும்பெயர் - நாற்கதியும்பர்மக்க ள்விலங்குநரகர்

நால்வகைஇழிச்சொல்லென்னும்பெயர் - பொ ய்குறளைகடுஞ்சொற்பயனில்சொல்லென, விவ்வகை நான்கு மிழிந்தசொல்லே

நால்வகைவேதத்தின்பெயர் - நால்வகைவேத மிருக்குத்தைத்திரியஞ், சாமவேதமதர்வணந்தானே

நால்வகையரணென்னும்பெயர் - மலையரண்காட்டர ண்மதிலரணீரரண் வையகஞ்சிறப்பினால் வகையரணே

நால்வகைக்கேள்வியென்னும்பெயர் - அறம்பொ ருளின்பம் வீடெனநான்குந், திறந்தெரிந்துகேட்ட னால்வகைக்கேள்வி,சொன்னநாவிற்றுமொத்தேயெ ழுகுத, லிவ்வகைக்கேள்வி யாமெனமொழிவர்

நால்வகைப்புலமையென்னும்பெயர் - கவியே கமகன்வாதிவாக்கியென, விவையொருநான்கே புல மைக்கிடல்லே

அவற்றுட்கவியின்வகை - ஆசுமதுரஞ்சித்திரம்வித் தாரமெனும்,பாவகைபாடுவோன்கவியெனப்படுமே

கமகன்வகை - ஞாபகஞ்செம்பொருணடையி னெப்பொருளும், காசின்றுரைப்போன் கமகனாகும்

வாதிவகை - ஏதுவுமேற்கோளுமெடுத்துக்காட் டிப், போதினளவுஞ்செய்து தன்சொன்னிறீஇ, வா திற்பிறர்சொன் மறுப்பான்வாதி

வாக்கிவகை - அறம்பொருளின்பம் வீடெனுந் திறங்கள், கேட்கவேட்கவினியனகூறு மாற்றலுடை யோன்வாக்கியாகும்

௰௨-வது- பல்பொருட்கூட்டத் ௱௯௫
தொருபெயர்த்தொகுதி.

ஆசுகவிவகை - கொடுத்தபொருளிற் றொடுத்த வில்பத்தி, யெடுத்தபொழுதிற்பாடுவதாசுகவி

மதுரகவிவகை - பொருளின்பொலிவுஞ்சொல் லின்செல்வமுந், தொடையுந்தொடைக்கண் விகற்ப முந்துதைந், துருவகமுதலா மலங்காரமுட்கொண், டோசைபொலிவுற் றுணர்வோருளங்கட்கு, மாகட லமிழ் தய்போற்பாடு தன்மதுரகவி

சித்திரகவிவகை — மாலைமாற்றே சக்கரஞ்சுழி குள, மேகபாத மெழுகூற்றிருக்கை, காதைகரப்பே கரந்துறைப்பாட்டே, பாதமயக்கே பாவின்புணர்ப் பே, கூடசதுக்கங் கோமூத்திரியே, யோரினத்தெழு த்தா லுயர்ந்தபாட்டே, யொற்றுப்பெயர்த்தலொரு பொருட்பாட்டே, சித்திரப்பாவே விசித்திரப்பாவே விகற்பநடையே வினாவுத்தரமே, சருப்பதோபத்தி ரஞ் சார்ந்தவெழுத்தே, வருக்கமுமற்றும் வடநூற் கடலு, ளொருக்குடன் வைத்த வுதாரணநோக்கி, விரி த்துமறைத்து மிறைக்கவிப்பாட்டுந்,தெரித்துப்பாடு வது சித்திரகவியே

வித்தாரகவிவகை — மும்மணிக்கோவையும் பன் மணிமாலையு, மறமுங்கலிவெண் பாட்டுமடலூர்ச்சி யுங், கிரீடையுங்கூத்தும் பாசாண்டத்துறையும், விரு த்தகவிதையு மியலிசைநாடகத்தொடு, விரித்துப்பா டுவது வித்தாரகவியே.

நால்வகைப்புண்ணியத் தோற்றமென்னும்பெ யர் — நால்வகைப்புண்ணியத் தோற்றந்தவத்துடன் மேலாமொழுக்கந் தானங்கல்வி

நால்வகைநிலையென்னும்பெயர் - சிலையோர்நா ல்வகை நிலைபைசாச, மாலீடமண்டிலம் பிரத்தியா லீடம்

அவற்றுட்பைசாசநிலைவகை — ஒருகாணிலத்தின்

றொருகால்முடக்கும், பரியாயமென்பது பைசாச நிலையே

ஆலீடநிலைவகை — வலக்கான்மண்டலித் திடக் கான்முந்துறு, மதற்பெயராலீட நிலையதாகும்

மண்டிலநிலைவகை — இருகான்மண்டலித் திடு தன்மண்டிலநிலை-

பிரத்தியாலீடநிலைவகை — வலக்கான் முந்துற் றிடக்கான்மண்டலிப்பிற், பிரத்தியாலீட மெனப்பெ யர்பெறுமே

நான்குயிர்த்தோற்றவகைப்பெயர் -பையோற் குடமின் முட்டையினிலத்தின், மெய்யகவியர்வையி னுன்குயிர்த்தோற்றம்

ஐந்திணைவகைப்பெயர்— ஐந்திணைகுறிஞ்சி பா லைமுல்லை, வந்தனெய்தன் மருதமாகும்

பஞ்சவாசவகைப்பெயர் - தக்கோலமேல மில வங்கஞ்சாதிக்காய், கர்ப்பூரமென்றிவை கமழ்பஞ்ச வாசம்.

பஞ்சாங்கவகைப்பெயர்- திதியேவாரநாள்யோகங் கரணமெனப், பகருஞ்சோதிடப் பஞ்சாங்கமாகும்

பஞ்சமாசத்தவகைப்பெயர் - பஞ்சமாசத் தந் தொருளைநரம்பு,கஞ்சனைபாட லெனக்கழறினரே

மதநன்பஞ்சபாணவகைப்பெயர்- மதநன்பஞ் சபாணமாவன, முல்லையசோகு முழுநீலஞ்சூதப்பு, வல்லிமுளரியோடைந்தெனமொழிப.

பஞ்சபாணச்செயல்வகை- மதன்பஞ்சபாணச் செயலுன்மத்தந், திரஞ்சந்தாபம் வசீகரணமோகநம்

பஞ்சசயநவகைப்பெயர் - மயிர்ச்சேணம்பஞ் சுமெத்தை வண்படர்ந்தூவி,மயிற்றுந்தண்வீப்பாய் பஞ்சசயநம்.

சயநவகை - மலர்ச்சயநஞ்சல்சயநந்தோற்சய நமற்றுப் ,பழிப்பிற்பதினேர்ந்துஞ் சயமென்ப.

தொருபெயர்த்தொகுதி.

பஞ்சபாதகவகைப்பெயர் - பஞ்சபாதகங்கொலைகளவுகள்ளுண்ட, லெஞ்சலில்குருநிந்தை பொய்யுமென்ப.

ஐம்பால்வகைப்பெயர் — ஒருவனொருத்தி, பலரொன்றுபலவென, வறியக்கூறியபாலைந்தாகும்.

ஐம்பான்முடிவகைப்பெயர்- ஐம்பான்முடியே கொண்டைசுருள்குழல், வம்பார்பனிச்சை வார்மயிர்முடியே.

ஐந்துண்டிவகைப்பெயர் - கடித்துப்பருகிவிழுங்கிநக்கி, யெடுத்துச்சுவைத்தலி வையைந்துண்டி.

குதிரைநடைவகைப்பெயர் - மல்லகதிமயூரகதி வாநரகதியொடு, சொல்லியசசகதி சரகதியென்னப், பல்விபற்பரிமாவிற் கைந்தொழினடையே.

ஐவகைவினாப்பெயர் — அறியான்வினாவலறி வொப்புக்காண்ட, லையமறுத்த லவனறிவுதான்கோட, லெய்யவர்க்குக்காட்ட லோடைவகைவினாவே.

ஈசனைம்முகவகைப்பெயர் - சத்தியோசாதம் வாமமகோரந், தற்புருடமீசானமென வீசர்க்கைம்முகம்.

பஞ்சபூதவகைப்பெயர் - மண்ணுநீருங்கனலுங் காற்றும், விண்ணும்பஞ்சபூதமென்ப.

ஐம்பொறிவகைப்பெயர் - மெய்வாய்கண்மூக்குச்செவி யைம்பொறியே.

ஐவகைத்தாயர்வகைப்பெயர் - பாராட்டுந்தாயூட்டுந் தாய்முதலைத்தாய், கைத்தாய்செவிலித் தாயைந்தெனக்கழறுவர்.

அந்தணராறுதொழில்வகைப்பெயர் - ஓதலோதுவித்தல் வேட்டல்வேட்பித்த, லீதலேற்றலென்றிருமூவகை, யாதிக்காலத் தந்தணராறுதொழில்.

அரசாறுதொழில்வகைப்பெயர் - அரசாறுதொழிலோதல்வேட்டல், புணாதிரப்பெரும்பார்ப்பு

ரத்தலிதல், கறையறுபடைக்கலங் கற்றல்விசயம்.

வணிகராறுதொழில்வகைப்பெயர் - வணிகராறு தொழி லோதல்வேட்ட, லீதலுழவு பசுக்காவல்வாணிகம்.

வேளாளராறுதொழில்வகைப்பெயர் - வேளாளராறுதொழி லுழவுபசுக்காவ, றெள்ளிறின்வாணியங்குயிலுவங்காருகவினை, யொள்ளியவிருபிறப் பாளர்க்கேவல்செயல்.

குயிலுவத்தொழில்வகை - குயிலுவம்வாத்தியங் கொட்டுதலாகும்.

காருகவினைவகை - பருத்திநூல்பட்டுநூல் மைத்நூடையாக்கலுஞ், சுமத்தலும்பிறவுங் காருகவினைத் தொழில்.

ஆறங்கவகைப்பெயர் - ஆறங்கமந்திரம்வியாகரணநிகண்டு, சந்தோபிசிதி நிருத்தஞ்சோதிடம்.

அறுசமயவகைப்பெயர் - அறுசமயம்வைசேடிகநையாயிக, மறுவின்மீமாஞ்சை யாருகதப்பௌத்தம், பிரதிலோகாயத மென்னும்பெற்றிய.

பாடாண்டத்துறைவகைப்பெயர் - பாடாண்டத்துறையுமிவற்றுட்பலவாம், பேசிற்றொண்ணூற்றறு வகைப்படுமே.

ஆறுட்பகைவகைப்பெயர் - ஆறுட்பகைகாமம் வெகுளியுலோப, மாறுகொண்மோகமதமாற்சரியம்.

அறுவகைத்தானையின்பெயர் - வேற்றானைவாட்டானை விற்றானைமேலோர், தேர்த்தானைபரித்தானை களிற்றுத்தானையென, வாற்றல்சான்ற வறுவகைத் தானை.

நன்னாட்டமைதியறுவகைப்பெயர் - செல்வம் விளைவுபல்வளஞ் செங்கோன்மை, கொல்குறும்பின்மை கொடும்பிணியின்மை, யிவ்வயிறாறு நன்னாட்டமைதி.

தொருபெயர்த்தொகுதி.

அறுசுவைவகைப்பெயர் - அறுசுவைதித்தித்தல்புளித்தல்கைத்தல், மறுவறுதுவர்த்தல் கூர்த்தல் காழ்த்தல்.

அரசியலறுவகைப்பெயர் — படையுங்குடியுங் கூழுமமைச்சு,மரணுநட்பு மரசியலாறே.

அறுவகையுலகநடையின்பெயர்- அறநிலையறமு மறநிலையறமு, மறநிலைப்பொருளு மறநிலைப்பொருளு,மறநிலையின்பமு மறநிலையின்பமுமென, வாறுவகைத்தே யுலகினடையே.

அறநிலையறத்தின்வகை — வருணைக்காப்பிற் பிறழாநெறிநிலை, பெறுவற்பொருளாற் பேணும்பெற்றி, யறநிலையறமென்றறைந்தனர்புலவர்.

மறநிலையறத்தின்வகை — ஆநிரைமீட்ட லரும் வகைதெறுதலு,நூறமில்செஞ்சோற் றுதவிப்போர்வயி னீறுஞ்செய்தலு மறநிலையறமே.

அறநிலைப்பொருள்வகை — நெறிவழிநின்று நெறியாலுழந்து,பெறும்பொருளென்ப வறநிலைப்பொருளே

மறநிலைப்பொருள்வகை - அமருழந்துகொண்டவுமருந்திறைகொண்டவுந், தவறுசெய்தோர்தண்டப்பொருளுங், கவர்சூதுவென்றவு மறநிலைப்பொருளே.

அறநிலையின்பவகை - ஒத்தகுலமுமொத்தவாயுளு, மொத்தசெல்வமு மொத்தநலனு, மத்தகவுடைய தறநிலையின்பம்.

மறநிலையின்பவகை — ஏறுதழுவலி லக்கமெய்தல், கூறுபொருள்கொடுத்தல் வலிதிற்கோடல், மாறுபடுநிலையமறநிலையின்பம்.

கருமபூமியாறுவகைப்பெயர்- உழவுதொழிலே வரைவுவாணிகம், விச்சைசிற்பமென்றித் திறத்தறுதொழில்,கற்பநடையது கருமபூமி.

போகபூமியின்வகை - பதினாறாட்டைக்குமாரனு ம்விறிவழிப், பன்னிராட்டைக்கு மரியமாகி, யொத் தவன்பினு மொத்தநலத்தினுங், கற்பகநன்மாநற்ப யனுதவ, வாகியசெய்தவத் தனவுமவ்வழிப், போகநு கர்வதுபோகபூமி.

போகபூமியறுவகைப்பெயர் - ஆதியரிவஞ்ச நல்லரிவஞ்ச,மேமதவஞ்ச மிரணவஞ்சந், தேவகுரு வமுத்தரகுருவமெனப்,போகபூமியறுவகைப்படுமே

சக்கரவர்த்திகள்வகைப்பெயர் — அரிச்சந்திர னளன் முசுகுந்தன்புரூரவன், சகரன்கார்த்த வீரிய னெனவா, வறுவகைச்சக்கரவர்த்திகளாகும்.

ஏழுதீவின்வகைப்பெயர் - முதலாநாவலந்தீவி றலித்தீவே குசையின்றீவே கிரவுஞ்சத்தீவே சான் மலித்தீவே தெங்கின்றீவே புட்கரத்தீவெயனுமோ ரேழு மேத்தியபெருந்தீவேழிற்கும்பெயரோ வேழ் பெருந்தீவிற்கு மேழ்பொழிலெனப்படும்.

ஏழுசமுத்திரவகைப்பெயர் - உவரோவிகருப்பு மதுநெய்தயிர்பால்புனல் மாகடலேழென வகுத்த னர்புலவர்

மேலேழுலகவகைப்பெயர் - உலகேழ்பூலோக ம்புவலோகஞ் சுவலோகம் மகலோகஞ் சநலோகம், தவலோகஞ்சத்தியலோகம்

கீழேழுலகவகைப்பெயர் - அதலவிதலசுதலநித ல, தராதல ரசாதல மகாதலமெனப் பாதலமோ ரேழல கெனப்பகர்வ, ரிருவகையேழ்பதி னாலு லகென்ப

சத்தகுலபருப்பதவகைப்பெயர் — இமயபந்தர ங் கைலைவடவிந்த நிடதமேம கூடநீலகிரியெனக் குலவரையேழுங் கூறுமென்ப

ஏழுமேகவகைப்பெயர் - புட்கலமாவணிபுட்க

தொருபெயர்த்தொகுதி.

வ்தரணி சலாந்திசலந்தி சகவருணி நீலியென்ப வெழுமுகிலின்பெயர்

எழுமழைவகைப்பெயர் - பொன்னும்பூவும்புனலுஞ்செந்நிறமு, மண்ணுங்கல்லுஞ் சோரியுமதன்பெயர்.

எழுநரகவகைப்பெயர் - பெருங்களிற்று வட்டம்பெருமணல்வட்ட, மெரியின்வட்டம் புகையின்வட்ட, மிருளின்வட்டம்பெருங்கீழ்வட்ட மரிபடைவட்டமென்றெழுவகைநரகம்.

சத்தமாதர்கள்வகைப்பெயர்-பிரமாணியிந்திராணிவைணவிவராகி, கௌமாரிமாயேசுரி மாகாளியெழுவர்.

எழுவகைத் தாதென்னும்பெயர் - இரதமுதிரமென்புதோலசை மூளைசுக்கில மெழுவகைத்தாதே.

செங்கோல்வேந்த னெழுவகைப் பேற்றின்பெயர் - அறம்பொருளின்ப மன்புமறுமை, திறம்பாப்புகழ்மதி யென்றிவையேழும் பெறுஞ்செங்கோலினெறிச்செல்வேந்தன்.

அட்டமாநாகவகைப்பெயர் - அட்டமாநாகம் வாசுகியநந்தன், விட்டபற்பன் மகாபற்பன் சங்க, பாலன்றக்கன் கார்க்கோடகனே, யேனுமாகுளிகனென்றெண்வகைநாகம்.

அட்டதிக்குப்பாலகர்வகைப்பெயர் - இந்திரனங்கியமனிருதிவருணன், வந்தவாயுக் குபேரனீசானென்னவெண்டிசையு லோகபாலகர்

அட்டதிக்குப்பாலகர் சார்திசைவகைப்பெயர் கீழ்த்திசைமுதலாச் சார்ச்சியுடைமையி, னவ்வவர்பெயரொடுமத்திசைமொழிப

சூரியசந்திரர்சார்திசைப்பெயர் - கீழ்த்திசையருக்கற்குவட்டிசைச்சோமற்குச், சார்ச்சியாகச்சாற்றினர்புலவர்.

நிலத்தின்கணம் - நிறைமூன்றதுசீர் நிலத்தின் கணமே

ஆய்வெட்டினுணர்க்கணவகை - நிலனீருமதியு யமானனு நலமிகுமுதல்வரிற் பிறநானுர்நம்

எண்வகை மெய்ப்பரிசத்தின்பெயர் - ஒட்டுதல் பிடித்த நீண்டநடவுதல் - கட்டுதல்வெட்டல் குத்த லூன்றலென் - றெட்டுந்தக்க மெய்ப்பரிசமென்ப

எண்வகைக்கணிதத்தின்பெயர் - சங்கலிதம்வியகலிதங் குணநம்பாகாரம், வர்க்கம்வர்க்க மூலங்கநமொடு கநமூலமெனக்காட்டுமெண்கணிதம்

எண்வகைமணத்தின்பெயர் - பிரமம்பிரசாபத்தியமாரிடந் - தெய்வங்காந்தருவ மாசுரமிராக்கதம்பைசாசமென்னப் பகருமெண்மணமே

எண்வகைவெற்றியின்பெயர் - (வெண்பா) "வெட்சிநிரைகவர்தல் மீட்டல்கரந்தையாம், வட்கார்மேற் செல்வது வஞ்சியாம் - உட்காதெதிரூன்றல் காஞ்சி யெயில் காத்தனொச்சி, யதுவளைத்தலாகுமுழிஞை" (சூத்திரம்) அதிரப்பொருவது தும்பையாகும், போரிக்களத்தொழிக்கார் செருவென்றது வாகையாம் - மற்றினைத்தொழிலு மத்தினைப்பூவு மப்பெயர்பெறுவதந்நிலத்தார்க்கே

எண்டிசையானைப்பெயர் - ஐராவதம் புண்டரீகம் வாமனங்குமுதம் - அஞ்சனம்புட்பதந்தஞ்சார்வபூமஞ் சுப்பிரதீபமென்னச்சொல்லு - மெண்டிசையானைக்கியலும்பெயரே

நவகண்டத்தின்பெயர் - வடபால்விதேகந் தென்பால்விதேகங் கீழ்பால்விதேகம் மேல்பால்விதேகம் வடபாலிராவதந் தென்பாலிராவதம் - வடபாற்பாரதந் தென்பாற்பாரதம் - மத்திமகண்டமென் றித்திறமென்ப - நாவலந்தீவி னவகண்டப்பெயரே

நவபுண்ணியத்தின்பெயர் - எதிர்கொளல்பணிதல்

விருக்கைகாணீர்- புதுமலர்தூபம் விளக்கேபுகழ்ந- லறுசுவையுண்டி யமைந்தோர்க்காற்றுத- லவபுண்ணியத்தி னுமமாகும்

நவதாரணைப்பெயர் - நாமதாரணை வச்சிரதார ணை- மாயாதாரணை சித்திரதாரணை- செய்யுட்டார ணை நிரைவுருவைறவாகிய- வெண்பொருட்டாரணை சத்ததாரணை- வத்துதாரணை சதுரங்கதாரணை நவ தாரணையி னுமமாகும்

நவதாளப்பெயர் - அரிதாளமருமதாளஞ் சம தாளஞ்சயதாளஞ்- சித்திரதாளந்துருவதாளம்- நிவி ர்த்ததாளம்படிமதாளம்- விடதாளமிவ்வயே நவதாள மென்ப

நவமணிப்பெயர் - வைரம்வைடூரிய முத்துமா ணிக்கம்- பவளங்கோமேதக மிந்திரநீல- மரகதம்புட் பராக நவமணிப்பெயரே

நாடகநவரசப்பெயர்- சிங்காரம்பெருநகைகரு ணைவீரிய- மற்புதம்பயம் ரௌத்திரங்குற்சைசாந்த- மென்னநாடகத் தியலுநவரசம்

பத்துத்திசைப்பெயர் - கிழக்குந்தெற்கு மேற் கும்வடக்குமென- நடக்குமென்ப நாற்பெருந்திசை யு- மந்தராளந் திசைநாற்கோணங்- கீழ்மேற்றிசை யொடு பத்தெனக்கிளப்பர்

தசாங்கத்தின்பெயர் - ஆறுமலையு யானையுங்குதி ரையு- நாடூருங் கொடியுமுரசுந்- தாருந்தேருந் த சாங்கமெனப்படுந்- தேரினதற்குச்சின்னமுமென்ப

அருச்சுனென்றநாமத்தின்பெயர்-பற்குனன்சுவே தவாகனன்பார்த்தன்- சவ்வியசாசி கிரீடிதனஞ்சயன்- விசயன்வீபற்சு காண்டிவன்கிருட்டினருச்சுனன்- தச நாமங்களாகும்

வேளாளர்பத்துவகைத்தொழிற்பெயர் - ஆணை

வழிநிற்ற லழிந்தோரைநிறுத்தல்- கைக்கடனாற்றல் கசிவகத்தின்மை- யொக்கல்போற்ற லோவாமுயற்சி- மன்னிறைதருத லொற்றுமைகோடல்- விருந்துபுறந்தருத றிருந்தியவொழுக்கம், வேளாண்மை மைந்தர்க் கோரீரைந்தே

அரிதசாவதாரப்பெயர் - மீனேயாமை வராக நரசிங்கம் வாமநன்பரசி ராமனிராமன் பலதேவன் வசுதேவன் வருகற்கியென் றாகுமீரைந்து மரியவதாரம்

சிற்பத்தொழிற் பத்துறுப்பின் பெயர்- கல்லுமுலோகமுஞ் செங்கலுமரமு மண்ணுஞ்சுதையுந் தந்தமும்வண்ணமுங் கண்டசருக்கரையு மெழுகுமென்றிவை பத்தேசிற்பத் தொழிற்குறிப்பாவன

ஏகாதசவுருத்திரர்பெயர்-மாதேவன் சிவனுருத்திரன்சங்கர னீலலோகித னீசாநன்விசயன் வீமதேவன் பவோற்பவன்காபாலி சௌமியனேகா தசவுருத்திரராகும்

துவாதசாதித்தர்பெயர்-வைகத்தன் விவச்சுதன் மார்த்தாண்டன்பாற்கர னிரவியுலோகப்பிரகாச னுலோகசாட்சி திரிவிக்கிரம னாதித்தன் சவித்திரன் றுவட்டா பங்கிசமாலியெனப் பன்னிரண்டாதித்தர்.

உயிர்வேதனை பன்னிரண்டுவகைப்பெயர்- அனலுஞ்சீதமும் வாதமும்பனியும், புனலுமாதமும் விடமும்விடமருந்தும்,பசியுநீர்வேட்கையும் பிணியுமுல்வறுமையும், உயிரின்வேதனையோரீராறே.

பதினெண்பாடையின்பெயர் - அங்கம்வங்கங் கலிங்கங்கௌசிகஞ், சிந்துசோனகந் திரவிடஞ்சிங்களம், மகதங்கோசல மராடங்கொங்கணந், துளுவஞ்சாவகஞ்சீநங்காம்போச,மருணம்பப்பரமெனப்பதினெண்பாடை.

தேவர்பதினெண்கணவகைப்பெயர் — அமரர்

௰௨-வது. பல்பொருட்கூட்டத்தொருபெயர்த்தொகுதி.

சித்தரசுரர்தைத்தியர்,கருடர்கிந்நரர் கிம்புருடர்காந்தருவ, ரியக்கர்விஞ்ஞைசய ரிராக்கதர்பூதர், பைசாசரந்தரர் முநிவருரக,ராகாயவாசியர் போகபூமியரெனப்,பதினெண்கணத்தின் பகுதியாகும்.

அரசர்க்குறுமவகையிற் பதினெண்கிளை வகைப்பெயர்—அமாத்தியர்புரோகிதர்சேநாபதியர்,தவாத்தொழிற்றூதர்சாரணரென்றிவை, யரசர்க்காகுமைம்பெருங்குழுவுங், காரணக்கிளைஞருங் கருமவிதிகாரருங், கநகச்சுற்றமுங்கடைகாப்பாளரு, நகரமாக்களு நளிபடைத்தலைவரு, மிவுளிமறவரும்யானைவீரரு, மரசர்க்கெண்பெயராயமென்ப,வடுத்தநட்பாளரு மந்தணளரு, மடைத்தொழிலாளரு மருத்துவக்கலைஞரு, நிமித்தகாரரு நீணிலவேந்தர்க்,குரைத்தவைம்பெய ருறுதிச்சுற்ற, முரைத்தமுப்பாலு முயர்குடைவேந்தர்க்குப்,பகுத்தபதினெண் கிளைப்பாலோரே.

யாக்கையிற்பதினெண்குற்றப்பெயர் - பசியுநீர்வேட்டலும்பயமும்வெகுளியு, மூவகையும் வேண்டலு நினைப்புமுறக்கமு, நரையுநோய்ப்படுதலு மரணமும்பிறப்பு,மதமுமின்பமுமதிசயமும்வியர்த்தலுங்கேதமுங்கையறவு மாகுமென்ப, மாயயாக்கைக்குப்பதினெண்குற்ற, மிக்குற்றநீக்கியோர் வச்சிரயாக்கையோர்.

பதினெண்புராணத்தின்பெயர்— மச்சியம்கூர்மம் வராகம்வாமநம் பிரமம்வைணவம் பாகவதஞ்சைவ, மிலிங்கம்பௌடிக நாரதியங்காருடம், பிரமகைவர்த்தமார்க் கண்டேயங்காந்தம், பிரமாண்டமாக்கிநேயம் பதுமமென்றிவை,பாற்படுபதினெண்புராணமாகும்.

உபபுராணம்பதினெண்வகைப்பெயர்— உசநங்கபிலங் காளிசநற்குமாரஞ், சாம்பவஞ்சிவதர்மஞ்சௌரந்துருவாச, நந்திநாரசிங்கந் நாரதீயம் பரா

சரம்பார்க்கவ மாங்கிரமாரீச, மாநவம்வாசிட் டலைங்கம்வாருண,மாமுப்புராண மாறுமூன்றென்ப.

தருமநூல்பதினெண்வகைப்பெயர் — மனுவேயத்திரிவிண்டுவாசிட்ட, மியமமாபத்தம்பமிரோவதஞ் சூரலைவம்,கோசமங்கிராமம் பாராசரம்வியாசந், தூவத்தாரங்கவுந் தவங்காத்தியேயந்தீசாகரம், பிரகற்பதியேமயங்குலியமென்னத், தருமநூல்பதினெட்டாகுமென்ப.

பதினெண்யாகவகைப்பெயர் - சோதிட்டோமமக்கினிட்டோம,மத்தியக்கினிட்டோமம் வாசபேய, மந்திராத்திரஞ்சோமயாகங் காடகஞ்சாதுரமாசியஞ் சவித்திராமணியே,புண்டரீகஞ் சிவகாமமேயந்திர, மங்கிசசமேன யிராசசூய, மச்சுவமேதம் விச்சுவதித்து, நரமேதப்பிரம மேதமென்னப், பதினெட்டியாகப் பலபெயராகும்.

இருபத்தைந்துதத்துவத்தின்பெயர்- நிலநீர்நெருப்புக் காற்றாகாயமென, வளவினின்ற வைம்பெரும்பூதமு, மைந்துவாயிலுமவற்றின்புலனுங், கைகால் குதம்வாய்மாநுடக்குறியெனக், கருமேந்திரியங்களைந்துமவற்றொடு, மநம்புத்தியாங்காரஞ் சித்தநான்குமியமாநமேனிருபத் தைந்துதத்துவம்.

இருபத்தெட்டலங்காரப்பெயர் — உருவகமுவமை வழிமடக்குநிலைமடக்கு, விரிசுடர்விளக்கென விரவிவருணவும்,வேற்றுமைநிலைய வெளிப்படுநிலையே, வார்த்தைதன்மை பிறபொருள்வைப்பெனப், பாற்படக்கிளந்த பகுதியின் வருணவுஞ், சிறப்புமொழி சிலேடைமறுத்து மொழிநிலையே நோக்கியுட்டொடர் தொகைமொழிமிகைமொழி, யுடநிலைகூட்ட முவமாநமுருவகை, நுவலாநுவர்ச்சிதலைக்கட்டியமொழி,நிதரிசனம்பா ராட்டொருங்கியநிலையே, யையமுயர்வே

தொருபெயர்த்தொகுதி

விரவியல் வாழ்த்தென, வெய்தக்கூறிய வெழுநாலங்க லங்காரம்.

முப்பத்திரண்டறத்தின்பெயர் — ஆதுலர்சாலை போதுவார்க்குணவறு, சமயத்தோர்க்குணவு பசுவுக்குவாயுறை, சிறைச்சோறை யந்தின் பண்டமகச்சோறு, மகப்பெறுவித்தன் மகவளர்த்தன்மகப்பா, லறவைப்பிணஞ்சுடுத லறவைத்தூரியம், வண்ணார் நாவிதர் வதுவைசுண்ணநோய்மருந்து, கண்ணாடிகாதோலை கண்மருந்து தலைக்கெண்ணெய், பெண்போகம்பிறர்துயர்காத்த, றண்ணீர்ப்பந்தர் மடந்தடாகங்கா - வாவுருஞ்சுதறி நரிமேயறுவிடத்தல், விலையுயிர் கொடுத்துக் கொலையுயிர்மீட்ட, லிச்செயன் முப்பத்திரண்டறமென்ப.

முப்பத்துமூத்தேவர்வகைப்பெய்யர் - ஆதித்தர் பன்னிருவரச்சுவிநிகளிருவ, ரீசர்பதினொருவ ரொன்மர்வசுக்க, ளாகமுப்பத்துமுத்தேவரென்ப

ஓரறிவுயிர்வகைப்பெயர் — ஒன்றேபுலனை தொன்றேயுடைமையின், மற்றைப்புல்லு மரனுமோரறிவே.

ஈரறிவுயிர்வகைப்பெயர் — உற்றறிபுலனுநாவுமுடைமையி, னட்டையுநந்துவும் போல்வவீரறிவே

மூவறிவுயிர்வகைப்பெயர் - உற்றறிபுலனுமூக்குமுடைமையின், முற்பெருஞ்சிதலெறும்பினைய மூவறிவே.

நாலறிவுயிர்வகைப்பெயர் — உற்றறிபுலனுமூக் கொடுகண்ணும், பெற்றவண்டுஞெண்டுநாலறிவே.

ஐந்தறிவுயிர்வகைப்பெயர் — உற்றறிபுலனுமூக் கொடுகண்செவி, மக்களுமாவுமைந்தறிவினவே.

ஆறறிவுயிர்வகைப்பெயர் — மநத்தோடாறறி வினரோமக்களொருசார்விலங்குமதுபெறற்குரிய.

காவியவியற்கைவகைப்பெயர் — காவியவியற் கைவிரிக்குங்காலை யாரியந்தமிழா மேனரிதினடக்கி யுலகின்றேற்றமு மொழிபினிறுதியும் வகைசாலொன்

ணூறாறுவாதியரும் வேதநாவினர் வேதியரொழுக்கமு மாதிக்காலத்தரசர்செய்தியு மவ்வவர்நாட்டா லறியுமற்றை மாடியும்பாடியு மறிவுவரக்கிளத்தல்.

ஆண்பாற்பிள்ளைப்பாட்டின்வகைப்பெயர்- திங்களிரண்டிற் றெய்வக்காப்பு மைந்தாந்திங்களிற் செங்கீரையு மேழாந்திங்களிற்றாலப்பாட்டு மெட்டாந்திங்களிலின்னமுதூட்டலு மொன்பதாந்திங்களிற்சப்பாணியும் பத்தாந்திங்களின் முத்தங்கூறலு மாண்டுவரையகவயி னீண்டுவருகென்றலு மீராண்டிங்களி னம்புலிகாட்டலு மிரண்டாமாண்டிற் சிறுபறைகொட்டலு மூன்றாமாண்டிற் சிற்றில்சிதைத்தலு நாலாமாண்டிற் சிறுதேருருட்டலும், வைத்தமுந்நான் காண்டெல்லைவரையிற், கச்சிற்சுரிகை காமுறப்புனைதலும், பெற்றியாண்பாற் பிள்ளைப்பாட்டே.

பெண்பாற்பிள்ளைப்பாட்டுவகைப்பெயர்-ஆனவரையகவயின் மூன்றுமொழித்தனவு, மூன்றாமாண்டிற்,குழமண்மொழிதலு, மைந்தின்முதலா வொன்பதின்காறு, மைங்கணைக்கிழவனை யார்வமொடுநோற்றலும், பனிநீர்தோய்தலும் பாவையாடலுஞ், சிறுசோறடுதலுஞ் சிற்றிலிழைத்தலு, மூசலாட்டு மென்றிவையுள்ளிட்டுப், பேசியபெண்பாற் பிள்ளைப்பாட்டே.

பேடியிலக்கணவகைப்பெயர்- பேடியிலக்கணம்பேசுங்காலை,நச்சுப்பேசலுநல்லுரையோதலுமச்சமாறி யாண்பெண்ணாகியுங்,கைத்தல்மொன்றைக்கடுக வீசியு, மத்தகத்தொருகைமாண்புறவைத்தலும், விலங்கிமிதித்தலும் வழிவேறுகியுந், துளங்கித்தூங்கிச்சுழன்றுதிணிந்து,நக்குநாணியு நடம்பலபயின்றும், பக்கம்பார்த்தும் பாங்குதிருத்தியுங், காரணமின்றிக் கடிபலகொண்டும்வாரணிகொங்கையைவலியநலிந்து,பிரங்கியுமழுது மயர்ந்தகுவருத்துங், குரங்கியுங்கொடி

யுங் கோதுகள்செய்து, மருங்கிற்பாணியைவைத்தும் வாங்கியு, மிரங்கிப்பேசியு மெல்லெலென்று, மின்னவைபலவு மியற்றுதலியல்பே.

கரந்துறைகோளின் வகைப்பெயர் - அரக்கோளினும்பருதியுஞ்சூரியனும், பரிவேடமுந்தூமமுமிந்திரவில்லும், பருகுவான்மீனுங் கரந்துறைகோளே.

திருப்பொறிவகைப்பெயர் - சங்குசக்கரமதியமரீமா விடபம்வேழமாசநதிறைகுடந்தோட்டி, விளக்குமுடிகடல் குலங்கொடியே, தாமரைசெயிர் தீரிகை திருப்பொறியாகுமென்ப ரறிந்திசினோரே.

ஐம்புலத்துயிரிழக்கும் வகைப்பெயர் - யானையூற்றின் மீனுஞ்சுவையி-லசுணமிசையி லளிநாற்றத்தி-லேனைப்பதங்க முருவங்கண்டுயி-ரிழப்பவாகுமென் மனார்புலவர்.

அரனூர்தியாயுதவகைப்பெயர் — அரனுடையூர்தியிடபமாகும்-பாசசூலப்பிநாகவில்படையே.

அரியூர்தியாயுதவகைப்பெயர் — அரியிடையூர்திகருடனாகுஞ் - சக்கரஞ்சங்கு தண்டுவாள்சாரங்கம்-பலமிக்கமாயோன்பஞ்சாயுதமே.

பலதேவன்படைகொடிவகைப்பெயர் - பலதேவன்படைகலப்பையாகுங் - கொடிபனையாமெனக்கூறினர்புலவர்.

அயனூர்திபடைகொடிவகைப்பெயர் — அயனுடையூர்தியன்னப்புள்ளு- படைபாசமங்குசங்கொடிவேதமென்ப.

குமரனூர்திகொடிபடைவகைப்பெயர் — குமரனூர்தி மயிலும்யானையுங்-கொடியேகோழிபடைவேலாகும்.

சாத்தாவினூர்திகொடிதாரவகைப்பெயர் — காரியூர்தியானையாகுங்-கோழியவர்க்குங் கொடியாகும்மே-பூரணைபுட்கலையு மவர்தாரமாகும்.

காமன்கொடிபடைவகைப்பெயர்- காமன்கொடிசுறவுகருப்புவில்லும்- பூவம்பாளி பொருபடையாகும்.

இயமனூர்தியாயுதவகைப்பெயர்- இயமனுடையூர்தியெருமையேறுபடை பாசத்தண்டமாகுமென்ப.

காலனாயுதவகைப்பெயர் — கூற்றின்படைகொடுங் கணிச்சியாகும்.

குபேரனூர்திவகைப்பெயர் - குபேரனூர்திபுட்பகவிமானமும் நரவாகனமு மாமெனநவில்வர்.

சூரியனூர்திவகைப்பெயர்— தனிக்காற்பொற்றேரருக்கனூர்தி.

சந்திரனூர்திவகைப்பெயர் — வெண்மதியூர்திவிமானமாகும்.

இந்திரனூர்திபடைகொடிவகைப்பெயர் — இந்திரனூர்திவெள்ளைவாரணம் படையேவச்சிரமிடி கொடியாகும்.

காளியூர்திகொடிவகைப்பெயர் — காளியூர்தியாளியாகும் பேயதாகு மவள்பெருங்கொடியே.

மூதேவியூர்திகொடிவகைப்பெயர்- கழுதையூர்தியுங் காக்கைக்கொடி, மொழியுங்காலை மூதேவிக்காகும்

சேரன்கொடி பாண்டியன்கொடிவகைப்பெயர் சேரற்குவிற்கொடி தென்னற்குக்கயற்கொடி.

சோழன்கொடிவகைப்பெயர்- சோழற்குப்புலிக்கொடியாகுமென்ப.

வேள்புலவரசர்கொடிவகைப்பெயர் — கேழல் வேள்புல வரசர்கொடியே யவ்வவர்பெயருங் கொடியும்படையு மவ்வவர்தம்மோ டறிந்துணர்ந்து கொளுமே.

அரசுவாயிற்குறிவகைப்பெயர் —காலோர்நான்குந் தனிக்கையுங்கோசமும் வாலுறப்போடேழுமா

௰௨-வது. பல்பொருட்கூட்டத் தொருபெயர்த்தொகுதி.

நிலந்தோய்ந்து பாலுஞ்சங்கும் போலுங்காலுகிறது காலினு ஞான்ற வொருதனிக்கையினும், வாயினும் வாலினு மருப்பினுங் கோறல்; வல்லதுமதின்மூன்று முழச்சற்றுடைத்தாகி யெழுமுழமுயர்ந்தொன்பது முழநீண்டது தீயுமிழ்சிறுகண்ணுஞ் செப்புகுருமுடைத்தாய் முன்புயர்ந்துபின் பணிந்ததாயி னவ்வி யல்யானையை யரசுவாவென்ப.

அநுலோமர்வகைப்பெயர் பார்ப்பாரரசர்வணிகர்வேளாளரென நாற்குலத்தவருந் தங்குலநடையி னுயர்ந்தவாணினு மிழிந்தபெண்ணினும் பிறந்தகூட்டத் தவரநுலோமர்.

பிரதிலோமர்வகைப்பெயர் -- இழிந்தவாணினு முயர்ந்த பெண்ணினும் பிறந்தகூட்டத் தவர்பிரதிலோமர்.

அந்தராளர்வகைப்பெயர் — அநுலோமகுலத் தாணினுமவ்வழிப் பிரதிலோமகுலப் பெண்ணினு மாகி யடுத்தகூட்டத் தவரந்தராளர்.

விராத்தியர்வகைப்பெயர் - பிரதிலோமகுலத் தாணினும்பின்னி னநுலோமகுலப் பெண்ணினு மாகி வியந்தோர்கூட்டத்துப்பிறந்தோர் விராத்தியர்

பல்லக்கணக்குவகைப்பெயர் - இருவிரலகலத் தறுவிரலாழத்தொரு குருநிறையப்பள்ளை யாட்டு மயிர்த்தொகைப் பற்றியதாகும் பல்லமென் கணக்கே

பதாதிவகைப்பெயர் — ஒருபெருங்களிறுமொரு பெருந்தேரும், புரவிநான்கும் படைஞராம் பதின்மரும் பதாதியென்று பகரப்படுமே.

சேநாமுகவகைப்பெயர்- பதாதிமும்மடிசேநாமுகமே.

குமுதவகைப்பெயர் — சேநாமுகமும்மடிதா னுங்குமுதம்.

கணவகைப்பெயர்-குமுதமும்மடிகொண் டது கணமே.

வாகினிவகைப்பெயர்— கணமும்மடியின்பெயர்வாகினியே.

பிரதனைவகைப்பெயர் — வாகினிமும்மடி யாகும்பிரதனை.

சமூகவகைப்பெயர் - பிரதனைமும்மடியாகுஞ் சமூகம்.

அநீகவகைப்பெயர்-சமூகமும்மடி யநீகமாகும்

அக்குரோணிவகைப்பெயர்-அநீகமையிரு மடியக்குரோணி.

ஒன்றுபத்தின்பெயர் - ஏகமொன்றே தசம்பஃதாகும்,

நூற்றின்பெயர் - ஆயிரத்தின்பெயர் - நூறுதசமே சகசிரமாயிரம்.

பதினாயிரத்தின்பெயர் - பதினாயிரம்பெய ரயுதமாகும்.

நூறாயிரத்தின்பெயர் - ஆயுதம்பத்தே நியுதநூறாயிரம்.

பத்துநூறாயிரத்தின்பெயர்-நியுதம்பத்தே பிரயுதமாகி-யிய லும்பத்துநூறாயிரமே.

நூறுநூறாயிரத்தின்பெயர் — பிரயுதம்பத்தே கோடியென்ப-வரைந்தநூறு நூறாயிரமென்னும்

அற்புதமென்னும்பெயர்- கோடிபத்தேயற்புதமாகும்.

சமுத்திரவகைப்பெயர் - அற்புதம்பத்தே சமுத்திரமாகும்

அத்தியவகைப்பெயர்- சமுத்திரம்பத்தே யத்தியமாகும்.

மத்தியவகைப்பெயர்- அத்தியம்பத்தே மத்தியமாகும்.

௰௨-வது பல்பொருட்கூட்டத் தொருபெயர்த்தொகுதி. உ௱௰௫

பாரதவகைப்பெயர்—மத்தியம்பத்தே பாரத மாகும்.

மகாகும்பத்தின்பெயர்- நூறுகோடிமகாகும்ப மாகும்.

நிகர்வகைப்பெயர்—மகாகும்பம் பத்துநூறு யிரங்கோடி.

மகாபற்பமென்னும்பெயர் - நிகர்வநூறுயிரங் கோடிமகாபற்பம்.

பிரமகற்பமென்னும்பெயர்-சங்கப்பாரதப்பத் தேபிரமகற்பம்.



செம்பொற்கிடையானைப்பற்சேந்தனென்னாளா னலமிகுநாட்டத்தன், பன்னியசிறப்பிற் பன்னிரண் டாவது, பல்பொருட்கூட்டத் தொருபெயர்த்தொ குதி, பன்னிருதொகுதியும்பண்பொடு முற்றின.

